# ஸாயிபாபா புராணம்

## இரண்டாம் பாகம்



நூலாசிரியர்:

திரு சு. நல்லசிவன்பிள்ளையவர்கள்
மதுரைத் தமிழ்ச்சங்கக்கலாசாலையாசிரியர்,
மதுரை.

உரையாசிரியர்:

திரு பு. சி. புன்னைவனநாதமுதலியாரவர்கள்,
தருமபுர ஆதீனக் கீழ்த்திசைப் பல்கலைக்கல்லூரித்
தலைமைத்தமிழ்ப்பேராசிரியர்,
மாயவரம்.

சென்னை அகில இந்திய சாயிசமாஜ பிரசுரம்.
1951



ஸாயி ராம்

# ஸ்ரீ பாபாவின் உறுதிமொழிகள்

1. இது வெறும் மசூதி அல்ல. இதுதான் துவாரகை. அவனிடத்தில் சரணமடைந்தவர் துன்பமடைவதில்லை.

2. இம்மசூதியின் படிக்கட்டுகளில் ஒருவன் ஏறும்போதே, அவனுக்குக் கர்மத்தால் ஏற்பட்ட துன்பங்கள் முடிவடைந்து, இன்பம் ஆரம்பமாகிறது. அந்தப் பக்கிரி (ஆண்டவன்) அளவிலாக் கருணை உள்ளவர். அவர் உன் கஷ்டங்களை நிவர்த்திக்கிறார்.

3. எப்போது ஒருவன் இந்தத் துவாரகாமாயிக்குள் பிரவேசிக்கிறானோ, அப்போதே அவன் எண்ணம் நிறைவேறுகிறது.

4. என் கண்ணோக்கம் எப்போதும் என்னை விசுவாசிப்பவர் மேல் இருக்கிறது. நீங்கள் எதுசெய்தாலும் எவ்விடத்தில் இருந்தாலும், இதை மாத்திரம் எப்போதும் கருத்தில் வைக்கவேண்டும். நீங்கள் செய்யும் ஒவ்வொன்றையும், நான் எப்போதும் அறிகிறேன்.

5. எவன் என்னையே தியானித்து, என் நாமத்தையே ஜபித்து என் லீலைகளையே பாடி அதனால் என் மயமாகிறானோ, அவன் கர்மங்கள் நசிக்கின்றன. அவனருகில் நான் எப்போதும் இருக்கிறேன்.

6. எப்போதும் சத்தியத்தை நாடியிருக்க வேண்டும். அப்போதுதான் நான் உன்னிடம் எப்போதும் இருக்கமுடியும்.

7. நீ என்னைக் குறித்து நினைக்கும் எக்காலத்திலும் எவ்விடத்திலும் நான் உன்னுடன் இருக்கிறேன்; பயப்படாதே.

8. ஒருவன் எப்போதும் என்னையே எண்ணி, என்னையே அடைக்கலமாக அடைந்தால், நான் அவன் கடன்காரனாகிறேன். அவனைக் காப்பாற்ற என் தலையையும் கூடக் கொடுக்கிறேன்.

(3-ம் அட்டைப் பக்கம் பார்க்க)

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

---

# ஸாயிபாபா புராணம்

## மூலமும் பொழிப்புரையும்

### இரண்டாம் பாகம்



நூலாசிரியர் :

திரு சு. நல்லசிவன்பிள்ளையவர்கள்,

மதுரைத் தமிழ்ச்சங்கக்கலாசாலையாசிரியர்,

மதுரை.

உரையாசிரியர் :

திரு பு. சி. புன்னைவனநாதமுதலியாரவர்கள்,

தருமபுர ஆதீனக் கீழ்த்திசைப் பல்கலைக்கல்லூரித்

தலைமைத்தமிழ்ப்பேராசிரியர்,

மாயவரம்.

சென்னை அகில இந்திய சாயிசமாஜ பிரசுரம்.

**1951**

# முன்னுரை

—:XOX:—

உலகில் அறங்குறைந்து மறமிகும் இக்காலத்தில், இறைவன் தன் அம்சத்தைச் சிலரிடையே அமைத்து மக்கட்சமூகத்தை உய்விக்க முயல்கிறான் என்பது முன்னோர் கண்ட உண்மை; அது முக்காலத்துக்கும் பொருந்தும்.

சில ஆண்டுகட்குமுன் சீரடி என்ற ஊரில் சாதி மதங்களைக் கடந்த பெரியாரொருவர் காணப்பட்டார். அப்பெரியார் எல்லாம்வல்லசித்தராக விளங்கினார். அவர் சமாதிபெற்றுச் சில நாட்களாயின; ஆயினும் வேண்டுவார் வேண்டுவனவற்றையெல்லாம் வேண்டியபடி அவர் பக்தர்களுக்கு இப்பொழுதும் உதவி வருகிறார். அப்பெரியார் நாமரூபங்கடந்த கடவுளைப்போலவே பாரததேசத்தில் பலசாதிமக்களாலும் போற்றி வழிபடப்பெற்றுவருகிறார்.

அப்பெரியாரின் சிறப்பை வரலாற்றுமுறையில் செய்யுள் வடிவில் என் நண்பர் திருவாளர் நல்லசிவன்பிள்ளையவர்கள் எழுதி வெளியிட்டிருக்கிறார். பிள்ளையவர்களைத் தமிழ்நாட்டில் அறியாதார் எவரும் இருக்கமுடியாது. திராக்ஷாபாகமாக அமைந்த செய்யுள் தமிழகத்துக்கு நல்விருந்தாகுமென நம்புகிறேன். பேராசிரியர் திருவாளர் புன்னைவனநாதமுதலியார் இந்நூலுக்குச் சிறந்ததோருரை யெழுதியிருப்பது போற்றத்தகும் செயலாகும்.

இங்ஙனம்,

3—12—'50
பி.எஸ். ஹைஸ்கூல்,
மயிலை.

வே. துரைசாமி.



மதுரைத் தமிழ்ச்சங்கக்கலாசாலைத் தலைமையாசிரியரும்
செந்தமிழ்ப் பத்திராசிரியருமான உயர்திரு
திரு. கி. இராமாநுஜையங்காரவர்கள் சிந்தைமகிழ்ந்துதரு

# சிறப்புப்பாயிரம்

*அறுசீர்க் கழிநெடிலடியாசிரியவிருத்தம்*

பூவுலகி லறந்தழையப் பொருவரிய மறையோங்கப் புலவர் வாழத்
தேவர்பிரான் பற்பலகால் தானேவந் தவதரித்தும் சீர்த்தன் றொண்டர்
யாவரையும் பிறப்பித்தும் அப்பொழுதப் பொழுதுநலம் ஈந்து நன்கு
காவல்புரி முறையிலின்று காசினியோர் உய்யஎழ கருணையாலே.

திருமகளும் கலைமகளும் மலைமகளும் மருவியுறை சிறப்பின் ஓங்கி
இருமையும்நன் களிக்குமெழில் நாவலந்தீ வின்முகமா யிம்ப ரேத்தும்
பெருமைமிகு நிஜாம்நாட்டில் பாத்திரிமா நகர்விளங்கப் பெரியோரேத்த
ஒருமுகினேர் சாயிபா பாவையுல குவந்துதொழ வுதவி னுறல்.

உலகறிந்த மற்றவன்மான் மியமனைத்தும் வரலாறே டுரைத்தியென்ன
நிலவுபுகழ் அகிலஇந் தியசாயி சமாஜத்தின் நேர்மை வாய்ந்த
தலைவனும் நரசிம்ம சாமி பணித்திடச் சுவைசால் தமிழ்ப்பா வாலே
இலைநிகர்மற் றிதற்கெனநா வலர்புகல ஒருபெருநூ லியற்றி யீந்தான்.

அன்னவன்முத் தமிழ்வளர நாவலர்கள் அகமகிழ அறங்கள் வாழ
மன்னுபுகழ்ப் பாலவனத் தம்புரக்கும் உக்கிரபாண்டியப் பேர்வள்ளல்
கன்னிநன்மா மதுரையிலே நிறுவுதமிழ்ச் சங்கத்துக் கலைக்கல்லூரி
தன்னியலியற் றமிழாசான் நல்லசிவ னெனும்நாமச் சான்றே னம்மா!

*வேறு*

இப்புலவன் இசைவளர வாழியினி தூழி
ஒப்புயர்வில் சாயிபுகழ் ஊழிபல வாழி
எப்புவியும் இருளகல எழுகதிர்போல் என்றும்
செப்புதெய்வ நலம்வாய்ந்த செந்தமிழ் வாழியவே.

இங்ஙனம்,
T. K. இராமாநுஜையங்கார்.

ஸ்ரீ நல்லசிவன் பிள்ளையவர்கள் இயற்றியுள்ள
ஸாயி பாபா புராணத்தின் சிறப்புப் பாயிரம்

## விருத்தம்

ஸாயி யெனுந் தண்மழையை உலகெலாம் அடைந்துய்ய தானளித்தார்
தாயினநுங் கருணைமுகில் வடிவான நரஸிம்ம ஸ்வாமி யென்பார்
பாயிரங்கோள் செந்தமிழில் சன்மார்க்கப் பயிர்வாழ பண்ணிசைத்தார்
ஆயி கயற் கண்ணி நகர் மேவு நல்ல சிவனென்றும் அறிஞரம்மா.

## வெண்பா

ஆவிக்கமுதோ அகவிருள்போம் மெய்விளக்கோ
கூவிப் பணிவோர் குடிவாழ — நாவில்
தித்திக்கும் ஸாயிகதை சிவன்பிள்ளை செய்தனர் காண்
பக்திக்கு மற்றோர் பணி.

ராஜம் ஸீதாராமய்யர்

# ஸாயிபாபா புராணம்

## இரண்டாம் பாகம்

மூலமும் பொழிப்புரையும்

### காப்பு

**விநாயகர்**

செக்கர் வானிற் றிகழுஞ் சடாடவி
முக்கண் முன்னவன் முன்றரு மூர்த்தியாம்
விக்கி னங்களை விண்ணவர்க் குங்களை
கைக்க டாசலக் கற்பகங் காப்பதே.

(பொழிப்புரை) செவ்வானம்போல் விளங்குகின்ற சடைக் காட்டினையும், மூன்று கண் (சோமன், சூரியன், நெருப்பு) களையும் உடைய சிவபெருமான் முதற்புதல்வராகப் பெற்றருளிய மூர்த்தியாகிய தேவர்களுக்கும் ஏற்படும் இடையூறுகளைப் போக்குகின்ற தும்பிக்கையை யுடைய மதமலையாகிய கற்பகம்போன்ற விநாயகக்கடவுள் காப்பாவர். (எ-று.)

குருவின் அவசியத்தைத் தாபோல்கர்க்கு, பாபா உதாரணமுகத்தால் விளக்கியது.

1. சாயியின் முற் சரித்திரஆ சிரிய ரான
   தாபோல்கர் சற்குருவின் சகாயம் இன்றி
ஏயபதி யினையடைதல் கூடு மென்றங
   கியம்பிவா தம்புரிந்த இயல்பை யோர்ந்து
நேயமுடன் அன்னவரை யழைத்துச் சாயி
   நித்தியா நித்தியவத் துக்க ளாய்தல்
தூயகுரு வருளின்றிக் கூடா தென்கை
   தோன்றவுதா ரணமுகத்தாற் றுலக்கு வாரே.

(போ-ரை.) சற்குருவின் துணையில்லாமல் நமக்குப் பொருந்திய தலைவனாகிய கடவுளை அடைதல்கூடும் என்று அங்குச் சொல்லி வாதம்

(தர்க்கம்) செய்த சாயியின் முதற் சரித்திர ஆசிரியரான தாபோல்கர் இயல்பை எண்ணி, சாயி அவரை அன்புடன் அழைப்பித்து அழியும் பொருள் அழியாப் பொருள்களை ஆராய்ந்தறிவது தூய குருவின் திரு வருளின்றிப் பொருந்தாது என்பது புலப்பட வரலாற்றுமுறையே விளக்குவார்.

2. குருகிருபை பரன்கிருபை யுடையோ ருக்குக்
குறையொன்றும் வராதுநிலை குலையு மாறு
வருபெரிய கேடனைத்தும் நலன தாக
மாறுமென நூல்கள் சொலும் வகையை யெண்ணி
அருவுருவாம் பரனருளை யடைய வேண்டில்
ஆசான்பாற் றமதுரிமை யனைத்தும் நல்கல்
பொருவறுநன் மக்கள்கடப் பாடா மென்று
புகன்றனர்சிற் சிலரதைத்தா போல்கர் கேட்டே.

(பொ-ரை.) குருவருளும் பரனருளும் பெற்றிருப்பவர்களுக்கு ஒரு குறையும் வராது. நிலைகெடும்படியாக வரும் பெரிய தீமைகளெல் லாம் நன்மைகளாகவே மாறும் என்று நூல்கள் கூறும்வகையைக் கருதி அருவுருவமாகும் கடவுள் திருவருளைப் பெறவிரும்பினால், குருவி னிடத்துத் தமக்கு உரியவற்றை ஒப்படைத்தல் ஒப்பற்ற நன்மக்கள் கடமையெனச் சிலர் கூறினார்கள். தாபோல்கர் அதனைக் கேள்வியுற்று,

3. குணங்கொள்கை முதலியஎத் தகைய வென்று
குறித்தறிந்திங் கொருவரைநற் குருவாக் கோடற்
கிணங்குநம்புத் தியைக்கொண்டே நிர்ண யித்தல்
இயல்பாம்அங் ஙனமிருக்க இருநீர் வைப்பில்
கணங்கொள்சுதந் திரத்தையும்புத் தியையும் மேற்சொல்
கருதரிய குருவினுக்கற் பணஞ்செய் திட்டால்
பிணங்கலிலா அதுநம்முன் னேற்றத் திற்குப்
பெருங்கேடென் றேபுகன்று பின்னுஞ் சொல்வார்.

(பொ-ரை.) ஒருவருடைய குணத்தையும் கொள்கை முதலிய வற்றையும் எப்படிப்பட்டவையென்று ஆராய்ந்து பார்த்து இங்கு ஒரு உத்தமரை நற்குருவாகக் கொள்ளுதற்கு இணங்குகின்ற நம்புத்தியைக் கொண்டே உறுதி செய்வது இயல்பாம். அவ்விதமிருக்கக், கடல்சூழ்ந்த உலகில் பெருக்கமான வலிமையையும் அறிவையும் மேற்கூறிய நினைக்க முடியாத குருவுக்குத் தத்தம் (அர்ப்பணம்) செய்துவிட்டால், மாறுபா டில்லாத அது நம் முற்போக்குக்குப் பெருங்கேட்டை விளைவிப்பதாம் என்று சொல்லி மேலும் சொல்லுவார்;

4. சற்குருபாற் சரண்புகுந்தோ ருக்குக் கேடு
சாராதென் றுரைக்கஇடஞ் சற்றும் உண்டோ
நற்குருபாற் பரமபத்த ராகி வாழும்
நமதரிசீ தாராம நாமம் பூண்ட
பொற்புறுதீட் சிதர்செல்வக் குழந்தை யீங்குப்
பொன்றினது கண்டோம்இப் புவியை நீத்துப்
பற்பல கூ றுவதெனென்று பகர்தா போல்கர்
பாபாபாற் சென்றனர்தீட் சிதர்பாங் கெய்த

(பொ-ரை.) 'சற்குருவைச் சரணடைந்தோருக்குக் கேடு வர மாட்டாது என்று கூற இடம் சிறிதும் உளதோ? நற்குருவின் சிறந்த பத்தியுடையவராகி விளங்கும் நம் அரிசீதாராமதீட்சிதரென்கின்ற அழகிய பெயரையுடையவரது செல்வக்குழந்தை இப்பூமியைவிட்டு இவ்விடத்து இறந்துபோனதைப் பார்த்துள்ளோம். வேறு என்ன பல பல பேசவேண்டியிருக்கிறது' என்று தீட்சிதரையும் அழைத்துக்கொண்டு பாபாவிடம் சென்றனர் தாபோல்கர்.

5. வந்தடைந்த இருவரிற்றீட் சிதர்பாற் பாபா
வாய்திறந்தங் கோர்வசனம் வழுத்த லானுர்
இந்தவ மாத்திரிபண் டிதராங் குள்ள
எழில்வசதி யினிற்புகன்ற தென்னென் றுரஃ
தந்தமிகு தாபோல்க ருளத்திற் றீய
அம்புபட்ட தெனத்தைத்த தறிதற் கொண்ணு
முந்துநெடுஞ் சேய்மையிற்றும் மொழிந்த மாற்றம்
முனிவரறி செயலதனை முன்னி ஆய்வார்

(பொ-ரை.) பாபா தம்மிடத்தில் வந்து சேர்ந்த தாபோல்கர், தீக்ஷிதர் என்ற இருவர்களில் தீக்ஷிதரிடத்துத் தமது திருவாயால் அவ்விடத்து ஒரு மொழியைச் சொல்லலானுர். (அஃதென்னவெனில்) இந்த எமாத்திரி பண்டிதர் அவ்விடத்துள்ள அழகிய இடத்தில் சொல்லியது என்னவென்று கேட்டார். அச் சொல்லானது அழகு மிகுந்த தாபோல்கருடைய மனத்தில் கொடிய அம்பு பட்டாற்போன்று தைத்தது. அறிய முடியாத முதன்மையான நீண்ட தூரத்தில் தாம் சொல்லிய சொல்லை முனிவர் அறிந்த செயலை (செய்கையை) நினைந்து ஆராய்பவராயினுர்.

6. மண்டலத்திற் குரு அணு வசிய மென்று
வசதியில்யான் வாதித்த வகையெவ் வாறு
கண்டலத்துக் கெட்டாத தூரத்துள்ள
காசகல்இம் மகுதியுள்ளார் கண்டார் காணு

விண்டலத்துச் செயலுமிவண் அறிய வல்ல
வித்தகரா குவரிவரிம் மேலோர் என்னைப்
பண்டழைத்த பெயரகற்றி முன்மா வல்ல
பண்டிதராய் வாழ்ந்து புகழ் படைத்தோரான

(போ-ரை.) பூமண்டலத்தில் குரு அனுவசியம் என்று நான் ஊரில் தர்க்கிக்கப்பட்ட விதம் கண்ணுற் பார்க்கக்கூடாத பெருந்தூரத்தி லுள்ள குற்றமற்ற இந்த மகுதியிலுள்ளவர் எவ்விதம் கண்டறிந்தார்? நாம் காணமுடியாத விண்ணுலக நிகழ்ச்சிகளையும் இவ்விடமிருந்தே அறியவல்ல சாமர்த்தியம்வாய்ந்திருப்பவராவர் இவர். இப்பெரியோர் என்னை முன்பு அழைக்கின்ற பெயரைநீக்கி முன்னாள் மிகப் பெரிய பண்டிதராய்வாழ்ந்து கீர்த்தியடைந்தவரான

7. மேதகும்ஏ மாத்திரிபண் டிதர்பே ரிட்டு
விளித்தனர்மெய் யறியாது வீண்வா தஞ்செய்
காதகனென் றேநினைந்து பரிக சித்த
கட்டுரையீ தாகுமென்று கருத்தில் அஞ்சி
மாதவர்தாள் பணிந்தனர்தா போல்கர் அன்ப
மனதடக்க மில்லாது வாதம் பேசிப்
பாதகம்ஏன் ஈட்டுகிறாய் குருவி லாமற்
பலிக்குமோ ஞானநெறி பாரு ளோர்க்கே.

(போ-ரை) மேன்மைபொருந்திய ஏமாத்திரிபண்டிதர் பெய ரிட்டு என்னை அழைத்தனர். உண்மையுணராமல் வீண்வாதம் புரிந்த பாதகன் என்றெண்ணி என்னை இழித்துரைக்கும் மொழியே ஈதாகு மென்று மனதிற் பயந்து தாபோலகர் மாதவரின் திருவடிகளிற் பணிந் தார். அன்பனே! மனவடக்கமில்லாமல் வாதம்பேசிப் பாதகத்தை ஏன் தேடிக்கொள்கின்றாய்? பூமியிலுள்ளவர்கட்கு ஞானமார்க்கம் குரு இல்லாமற் பலிக்குமா? (பலியாது என்றபடி)

8. ஓரூர்க்குப் பலவழிக ளுளசெல் மார்க்கத்
தும்பல்புலி யெண்குகளுண் டுவையி லாத
நேரான வழியும் உண்டவ் வூர்செல் நல்ல
நெறியறிந்தோன் வழிகாட்டில் நிலை தப்பாது
சேரூர்க்குச் செலலாகும் குருவே மோக்கஞ்
செல்விடத்து வழிகாட்டி தெளிதி யென்று
பேரூரி லாப்பிரமக் தாமா யுள்ள
பெருந்தவப்பா பாவுரைத்தப் பின்னுஞ் சொல்வார்.

(போ-ரை.) ஓர் ஊருக்குச் செல்லப் பல வழிகள் உள. செல்லும் வழியில் புலிகள் கரடிகள் பல உள. புலி முதலியன இல்லாத செம்மை

யான வழிகளும் உள. அவ்வூருக்குப் போகத்தக்க நலவழியைத் தெரிந்தா ணொருவன் வழிகாட்டுவானாயின், தான் அடையவேண்டிய ஊரை சிலை கெடாமல் அடையக்கூடும். அதுபோல் வீட்டை அடையும் வழிகாட்டி குருவே என்பது தெளிவாயாக, என்று ஊரும் பேரும் இல்லாத ஒப்பற்ற பிரமமாயிருக்கும் பெருந்தவப் பண்புடைய பாபா கூறி மேலும் பேசுவார்;

9. ஒரு காலத் தினில் யானும் மற்றுமூ வருமொருங்கே
யுறைந்து தூய்மை
தருவேத சாத்திரவி சாரணைசெய் தோம்பிரம
சாசித் யத்தைத்
திரமாக அடையும்வகை யெவ்வாறென் றவ்வகைதான்
சிந்தை யொன்றி
யொருவாத சுயப்பிரயா சையைக் கொண்டேயுறலாமென்
றொருவர் சொற்றூர்.

(போ-ரை.) ஒரு காலத்தில், யானும் வேறு மூவரும் ஓரிடத்தில் தங்கித் தூய்மைதருவதான வேத விசாரணை நடத்தினோம். பிரமசாசித்தி யத்தை உறுதியாக அடையும் உபாயம் என்னவென்று ஆராய்ந்தோம். அப்பொழுது எங்களில் ஒருவர் மனம் பொருந்தி விடாத சுய முயற்சியால் அச்சாசித்தியத்தை அடையலாகும் என்றார்.

10. மற்றிருவர் தாமுமவ்வா றேபுகன்றூர் குருஅனு
வசியம் என்று
முற்றுமவ ருரைத்தவையங் கீகரியா தொருகுருவை
முன்னர்த் தேடி
யுற்றுடலா தியமூன்று மவர்பாலொப் புவித்தவர்பால்
உய்யும் மார்க்கம்
பெற்றிடலே சிறந்தவழி யவரேதெய் வமுமுயிரும்
பிறவும் என்றேன்.

(போ-ரை.) அவ்விதமே மற்ற இருவரும் குரு அனுவசியம் என்று சொன்னார்கள். முழுவதும் அவர்கள் சொல்லியவற்றை ஒப்பாமல் ஒரு குருவை முதலில் தேடிப்பெற்றுத் தம் உடல், பொருள், ஆவி என்ற மூன்றையும் அவரிடம் ஒப்படைத்து அவர் மூலம் நற்கதி யடையும் வழியை நாடியடைதலே சிறந்த நெறி. அவரே கடவுளும் உயிரும் பிறவும் ஆவர் என்றேன்.

11. இன்னவா றொருவரோ டொருவர் வாதித்
திருள்மிகுந்த அரணியம்ஒன் றினுக்குச் சென்றோம்
அன்னகா னகத்திலொரு வனசஞ் சாரி
அருஞ்சுரத்தில் வெய்யிலிலெங் கலைகின் றீர்கள்

என்னகா ரியங்கருதி யெனவி னுவ
இறையொன்றும் பகராதெம் இதயப்போக்கிற்
சொன்னவா சகஞ்செவிக்கொள் ளாது சென்றோம்
தொடர்ந்து வந்து மீண்டுமெமைத் துருவிக் கண்டு

(போ-ரை.) இங்ஙனம் ஆக ஒருவரோடொருவர் தர்க்கித்துக் கொண்டே இருள் நிறைந்த காடொன்றிற்குப் போனோம். அத்தகைய காட்டில் வசிக்கின்ற வேடன் ஒருவன் எங்களைப் பார்த்து இக்கடுங் காட்டில் என்ன காரியங் கருதி வெயிலில் அலைகின்றீர்கள் என்று கேட்கவும் அவனுக்குப் பதில் ஒன்றும் சொல்லாமலே அவன் சொல்லிய சொல்லையும் காதிற் போட்டுக்கொள்ளாமலே எங்கள் மனம் போனவழியே போனோம். அவன் திரும்பவும் எங்களைத் தொடர்ந்து வந்து எங்களைத் தேடிப் பார்த்து,

12. மார்க்கமிலாக் காட்டினிலெங் கேகு கின்றீர்
வந்தெனிடம் அனம் அருந்த வாரீர் என்றான்
கார்க்கடல்போற் கருணையுடன் அழைத்தும் உண்ணுங்
கவலையிலா யாங்களதைக் கருதா தெங்கள்
போக்கினிலே போதலுற்று வழிகா ணாது
புந்திநைந்து திகைத்திருக்கும் போதில் அன்னோன்
நோக்கியெமை வழிதெரிந்தோர் துணையின் றிக்கான்
நுழைந்துசுய புத்தியினால் நொந்து வாடி

(போ-ரை.) செல்லும் வழியில்லாத காட்டில் எங்கே செல்லப் போகின்றீர்கள்? நான் தங்கியிருக்கும் இடம் வந்து உணவு உண்ண வருவீராக என்றான். கருங்கடல்போற் பரந்த கருணையுடன் எங்களையழைத்தும் நாங்கள் சாப்பிடவேண்டுமென்ற ஆத்திரமில்லாமையால், அவன் வார்த்தையைப் பொருட்படுத்தாமலே எங்கள் சித்தப்படியே போகலானோம். வழி தெரியாமல் மனம் வருந்தித் தத்தளிக்கும் காலத்தில் அன்னவன் எங்களைப் பார்த்து வழி தெரிந்தவர் துணையில்லாமல் இந்தக் காட்டில் நுழைந்து வருந்தி வாடிச் சொந்தப் புத்தியினால்,

13. தப்புவழி தனிலிறங்கி விட்டீ ரேமேற்
சார்கதிக்கு வழிதெரிந்தோர் சகாயம் இன்றி
எப்பொழுதும் உயலாகா குருவே யீண்டை
யிகபரத்தும் வழிகாட்டி யென்னும் உண்மை
இப்பொழுதா யினுந்தெரிந்த தாவென் றோதி
யென்னுரையைத் தள்ளலுங்கட் கிதமன் றுண்டி
செப்பமுடன் உணவருக இஃதுங் கட்குச்
சித்திதரும் அறிகுறியாஞ் செப்புங் காலே.

(போ-ரை.) தப்பான வழியில் இறங்கிவிட்டீர்கள். வழி தெரிந்தவர்கள் உதவியின்றி ஒருபொழுதும் மேற்கதியை அடைந்து கொள்ள முடியாது. இவ்வுலகத்தில் குரு ஒருவரே இம்மைக்கும் மறுமைக்கும் வழிகாட்டி என்கின்ற உண்மையை இப்பொழுதாவது தெரிந்துகொண்டீர்களா? என்று எடுத்துரைத்து எனது வாசகத்தை அலட்சியஞ்செய்வது உங்கட்கு நன்மையன்று. உணவை உவகையுடன் வந்து உண்க. இதுவே சொல்லுமிடத்து உங்கட்கு வெற்றியை விளைவிப்பதற்கு அறிகுறியாகும்.

14. எனம தித்துவன சரனி சைத்ததையெண்
ணுது பின்னும் வழி தேடியப்
புனமதிற் புகுத வேமுயன்றசிறு பொழுதி
லே பசிபொ ருமலே
அனவி ருப்புடன்மி குந்த நீர்நசையை
அதிக ளேப்பினை யடைந்தியான்
மனம திற்கருணை வாய்ந்த அந்தவன
வாசி வாழிட மருங்குபோய்

(போ-ரை.) என்று கருதி வனத்தில் வசிக்கின்ற வேடன் சொல்லியதைப் பொருட்படுத்தாது மேலும் வழியை நாடி அக்காட்டிற்புக முயற்சித்த சிறிது காலத்துள்ளே தாங்கமாட்டாத பசியும் உணவுத் தேட்டமும் மிகுந்த நீர்வேட்கையும் மிகுந்த களைப்பும் அதிகப்படவே கருணை வடிவினனான அந்த வனவேடன் இருப்பிடத்திற்குப்போய்,

15. அன்பொ டன்னவன் அளித்த ரொட்டியை
யருந்தி நீர்நசையும் ஆற்றியே
யின்பொ டாங்குவதி நண்பர் மூவரிட
மெய்தி யான் அவண் இருந்துழி
முன்பு வந்த அவன் மீண்டும் எங்கள்முனம்
முடுகி யெவ்விடய முன்னிநீர்
துன்பு டன்புரிதிர் வாதம் என்ன அவை
சொல்லி னேன்முழுதும் வல்லையே.

(போ-ரை.) அவ்வேடன் அன்புடன் அளித்த ரொட்டியைத் தின்று தண்ணீர்த் தாகமுந்தணிந்து இன்பத்தோடு ஆங்குத் தங்கியிருந்த நண்பர்கள் மூவரிடமுஞ் சேர்ந்து நானும் இருந்தபொழுதில் முன் வந்தவன் மறுபடியும் எங்கள்முன் விரைந்துவந்து எந்தப்பொருளைப் பற்றி நினைந்து நீங்கள் துன்பத்தோடு விவாதஞ் செய்கின்றீர்கள் என்று கேட்க அவைகளை முழுவதும் விரைவாகச் சொன்னேன்.

16. சொன்ன பொழுதில் வனசரனாய்த்
தோன்றும் குருவின் மகிமையினை
இன்ன தெனக்கண் டறியாதங்
கிருந்த மூவ ரெனைப்பிரிந்து
முன்னை வினைவந் தீர்க்கமதி
முழுதும் இழந்தார் முன்னினராற்
கன்னல் கரத்தெய் தியதேனும்
கைப்பே விரும்புங் கசடரைப்போல்

(பொ-ரை.) சொன்னகாலத்தில் காட்டில் வாழ்பவராய்த் தோன்றிய குருவின் மகத்துவத்தை இத்தன்மையதென்று பார்த்து அறியாதவரான அங்கிருந்த அம்மூவரும் இனிப்பு மிகுந்த கரும்பு கையிற் கிட்டிய காலத்தும் கசப்பு மிகுந்த வேம்பையே விரும்பும் கசடர்களைப்போல் பழைய தீவினை பற்றி யிழுத்தலால் எனைப்பிரிந்து மதி முழுதும் கெட்டுத் தங்கள் ஊர்கருதிப் போயினர்.

17. அன்னவர் அகன்ற பின்றை அக்குரு அமல பாதந்
தன்னையான் றொழுது நின்றேன் றனித்தெனை யழைத்தங்கோர்பால்
மன்னுகூ வத்தின் பக்கல் வந்துநின் றருகில் உள்ள
மின்னவிர் தருவில் ஓர்நாண் விசித்தந்தக் கயிற்றினாலென்

(பொ-ரை.) அன்னவர் நீங்கியபின் அந்தக்குருவின் தூய திருவடிகளை நான் வணங்கிநின்றேன். அவர் என்னைத் தனியே ஓரிடத்துக்கு அழைத்துப்போய் ஒருபக்கமிருந்த கிணற்றின் அருகில் வந்து நின்று சமீபத்திலுள்ள ஒளிதரும் மரத்திற் கயிறொன்றைக்கட்டி அக்கயிற்றினால் எனது,

18. காலிரண் டினையுங்கட்டிக் கதித்தநீர் மட்டத்திற்கும்
ஏலும்என் றலைக்கும் மூன்றென் றிடும்அடி தூரத் தந்நீர்
சாலவென் றனக்கெட் டாத தன்மையிற் றலைகீ ழாக
வேலைநீர் போல ஆழ்ந்து விசாலமும் அதுவே யான

(பொ-ரை.) இரண்டுகால்களையும் பிணித்துப் பொருந்தும் என் தலைக்கும் நீர்மட்டத்துக்கும் மூன்றடி தூரமிருக்கும்படி அந்நீர் மிகவும் எனக்கெட்டாத முறையில் தலைகீழாகக் கடல்நீர்போல் ஆழ்ந்ததும் பரந்ததுமான,

19. கூவலுள் தொங்க விட்டுக் கோதிலார் எங்கோ சென்று
மேவினர் யாமத் தின்பின் விசிப்புடன் இருக்கும் என்பால்
தாவிலாய் எவ்வா றீண்டுன் றன்னிலை யென்றார் மிக்க
பூவலர் பொழிற்கீழ் வைகல் போன்றுள
[தென்றேன் அன்றே.

(பொ-ரை) அந்தக் கிணற்றில் தொங்கவிட்டுஅத்தூயவர் எங்கேயோ மறைந்துவிட்டார். யாமநேரத்தின்பின், கட்டப்பட்டுத் தொங்கிக்கொண்டிருக்கும் என்னிடம் வந்து வருத்தமற்றவனே (கேடற்றவனே) உன் நிலைமை இவ்விடம் எவ்வாறிருக்கின்றது என்று கேட்டார். மிகுந்த பூக்கள் மலர்ந்த சோலையின்கீழ்த் தங்கியிருத்தல்போன்றுள்ளது என்றேன்.

20. உளங்களி கூர்ந்தங் கென்னை உறவியி னின்றுந் தூக்கிக்
களைந்தனர் இருகாற் கட்டைக் கருணையார் கலியே
[போல்வார்
வளர்தரும் அவர்கை யாலென் மத்தகம் உடலந் தீண்டித்
தளர்ந்திடா விதம்இன் சொற்கள் சாற்றினர் ஆற்ற ஆங்கே.

(பொ-ன்ர) மனமகிழ்ந்து அருட்கடலாகிய அவர் என்னை அந்தக் கிணற்றினின்றும் எடுத்து, இரண்டுகால்களிலும் கட்டியிருந்த கட்டை அவிழ்த்தனர். தம் நலம்பொருந்தியகையால் என் தலை உடல் இவற்றைத் தடவித் தளர்ச்சியுறாது யான் தேறும்வகையில் இன்சொற்கள்பல அவ்விடத்தே இயம்பினர்.

21. அதுமுதல் அவர்தஞ் சந்நி தானத்தி லெனையி ருத்தி
மதிபிறி தொன்றிற் செல்லா வகைபுரிந் தனர்நா ளெல்லாம்
பதுமம்நே ரவர்மு கத்தைப் பார்த்திருப் பதுவே யெற்குத்
துதிபெறு பேரா நந்தஞ் சொல்லுவன் இன்னுங் கேட்டி.

(பொ-ரை) அதுமுதல், அவர் தமது சமுகத்தில் என்னையிருக்கச் செய்து எனது சிந்தை வேறொன்றிற் செல்லாதமுறை செய்தனர். நாள்தோறும் தாமரைமலர்போன்ற அவர்முகத்தைப் பார்த்துக்கொண்டிருப்பதே எனக்குப் புகழப்படும் பேரின்பமாகும். மேலும் சொல்லுவேன் கேட்பாயாக.

22. அன்ன தேசிகர் அன்றி அவனியிற்
பின்னும் ஓர்பொருள் பெற்றிட எண்ணிலேன்
அன்னை மானும் அவரரு ளாலெனக்
கிந்நி லத்தினில் இல்பொருள் இல்லையே.

(போ-ரை) உலகில் அத்தகைய குருவையன்றி மற்ெருரு பொருளைப் பெறக் கருதிலேன். தாயை ஒக்கும் அவர் கிருபையால் இவ்வுலகத்தில் எனக்கு இல்லாதபொருள் ஏதும் இல்லை.

23. ஆத லாற்குரு வன்றி யடைதரும்
மேத கும்பொருள் வேறிலை யென்றுமெய்ப்
போதம் நல்கு புகழ்க்குரு வின்றுணைப்
பாத பங்கயம் பற்றுதல் பண்பரோ.

(போ-ரை) ஆகையால் குருவைத்தவிர அடையத் தக்க மேன்மைப்பொருள் பிறிது இல்லையென்று மெய்யுணர்வைக்கொடுக்கும் புகழ்க்குருவின் இணையடிமலர்களைப் பற்றுவதே பண்பாகும்.

24. எனக்குருவின் அவசியத்தைத் தாபோல்கர்க்
கினிதெளிதின் எடுத்துக் காட்டித்
தினைத்துணையும் ஐயமுறேல் குருவின்றி
யெத்தொழிலுஞ் சித்தி யாகா
மனத்துளபே தத்தையொழித் தினியென்றன்
வரலாற்றை வாய்மை யாக
வுனத்தகுந்த வாறெழுதென் றுதியருளி
விடையளித்தார் உவந்து சாயி.

(போ-ரை) என்று குருவின் அவசியத்தைத் தாபோல்கருக்கு எளிதாக எடுத்து விளக்கிச் சிறிதளவும் ஐயப்படாதே, எச்செயலும் குருவின்றி வெற்றியடையாது. மனத்தில் உள்ள வேற்றுமையை விட்டு, இனி என்னுடைய வரலாற்றை உண்மையாகச் சிந்திக்கத்தகுந்தபடி எழுது என்று பணித்து மகிழ்ந்து விடையளித்தார்.

25. பத்தொன்ப தெனும்நூற்ருே டீரெட்டாம்
வருடமதிற் பாபா வின்சீர்ச்
சத்தொன்று சரிதமதைத் தொடங்கியிரு
நான்காண்டு தாழ்வி லாஅம்
மெய்த்தொண்டின் வழிநின்று மாராஷ்ட்ர
மொழியதனில் மேன்மை யோங்க
உத்தண்டத் துடன்வரைந்தார் தாபோல்கர்
அதன்பெருமை உரைக்கொ ணுதே.

(போ-ரை) 1916ம் வருடத்தில் தாபோல்கர் பாபாவின் சத்

தமைந்த வரலாற்றை ஆரம்பித்துத் தாழ்வில்லாத அப்பணியிலே எட்டாண்டு ஒழுகி மகாராட்டிரமொழியில் பெருமை சிறக்க உற்சாகத்துடன் எழுதி முடித்தார். அவ்வரலாற்றின் பெருமையை உரைக்கமுடியாது.

## ராதாபாய் தேசமுகீனுக்கு உபதேசம்

26. பொற்புமிகு ராதாபாய் தேசமுகீன்
எனும்நாமம் புனை ஓர் நாரி
முற்பலசன் மங்களிற்செய் புண்ணியத்தாற்
பாபாவின் முன்பு வந்து
பற்பலநாட் காத்திருந்தாள் கர்ணோப
தேசமது பரிவின் எய்தக்
கற்புறும்அன் னவட்கண்டுங் கடைக்கணியா
திருந்தனரக் கடவுட் சாயி.

(பொ-ரை) ராதாபாய் என்ற பெயர்புனைந்த அழகுமிக்க பெண் ஒருத்தி முற்பலபிறப்புக்களிற் செய்த புண்ணியத்தின்பயனுகப் பாபாவின் முன்னர்வந்து அவர் வாயிலாக அன்புடன் கர்ணஉபதேசம்பெறுங் கருத்துடன் பலநாட்கள் காத்திருந்தாள். கற்பு அமைந்த அத்தகையாளைப் பார்த்தும் திருவருணோக்கஞ்செலுத்தாதிருந்தார் அந்தத் தெய்வத் தன்மை வாய்ந்த சாயி.

27. ஈதுணர்ந்திங் குபதேசம் எற்கருளா
ராகிலிவண் இருந்து மாய்வேன்
எதமுறப் பன்ைட்பட் டினியிருந்தென்
றியம்பியவ்வா றிருந்தாள் அந்த
மாதுபுரி நோன்பறிந்தங் கவளையழைத்
தோர்வார்த்தை வழங்க லுற்றார்
மேதகுதா யனையாய்பட் டினியிருந்திங்
குயிர்மாய்தல் மேன்மை யாமோ

(பொ-ரை) எனக்கு உபதேசம் அருளாராயின் நான் இங்குப் பட்டினிகிடந்தே இறப்பேன் என்று சொல்லி அவ்விதமே நோன்பு நோற்றிருந்தாள் ராதாபாய். இதனையறிந்த சாயி அவளை அழைத்து மேன்மை மிக்கதாயை ஒப்பாய்! பட்டினிகிடந்து உயிரைமாய்த்தல் மேன்மை யாகுமோ? என்று சொல்லலானர்.

28. என்குருவோர் மகத்தான அவலியா
அருள்நிறைந்தஇதயம் உள்ளோர்

அன்புருவாம் அவர்சேவை தனிலேயென்
மெய்களைப்பை யடைந்த தன்னோர்
மன்புவியில் யான் விழைந்த கர்ணோப
தேசமொன்றும்வழங்கி னாரில்
பின்பவர்செய் விதமதுகேள் மனங்கனிந்து
மற்றதனைப் பேசு வேனே.

(பொ-ரை) என்குரு சிறப்பார்ந்த ஓர் அவலியா, அருள் நிறைந்த உள்ளமுடையவர். அன்புவடிவான அவர் தொண்டினிலே என் உடல் தளர்ந்தது. அப்படிப்பட்டவர் நிலைபெற்ற இப்பூமியில் யான் விரும்பிய செவி உபதேசத்தை எனக்குச் சொல்லவில்லை. பின்னர் அவர் செய்த விவரத்தை மனமுருகிச் சொல்கிறேன் கேட்பாயாக.

29. என்னுடலா தியமூன்றுங் கொண்டனரன்
றியும்அவரோ ரிரண்டு பைசா
நின்னுரிய தக்கிணையாக் கொடுவெற்கிங்
கெனப்பணித்தார் நிலையி லாத
பொன்னையுமற் றெவற்றையும்ஓர் பொருளாகக்
கருதாதோர் புன்மை யாக
முன்னுமிரு பைசாவெற் களியென்ற
தென்னையெனின் மொழியக் கேண்மோ.

(பொ-ரை) எனது உடல் பொருள் உயிர் என்னும் மூன்றையும் ஒப்புக்கொண்டனர். மேலும், எனக்குக் கொடுக்கத்தக்க தட்சிணையாக இரண்டுபைசாக் கொடு என்று கேட்டார். நிலையாத பொன்னையும் மற்றெவற்றையும் ஒரு பொருள் எனச் சிந்தியாதவர் அற்பமாக இரண்டு பைசா எனக்குக்கொடு என்று அவர் கேட்டதன் காரணத்தைக் கூறுவேன் கேட்பாயாக.

30. அவ்விரண்டு பைசாவும் பைசாவோ
அல்லநிட்டை அமர்தல் மற்றும்
செவ்வியநன் மனத்திடனோ டிருக்கையிவற்
றுடன்பாடே தெளிதி அவ்வா
றிவ்விரண்டும் அவர்க்களித்தேன் உளங்களித்திங்
கெனையேபார்த்திருநீ யானும்
ஒவ்வும்வணம் உனைப்பார்ப்பேன் இதுவேயென்
உபதேசம் உணர்தி யென்றார்.

(போ-ரை) அந்த இரண்டு பைசாவும் பைசாவோ அல்ல ஒன்று நிட்டையிலிருத்தல், மற்றொன்று செம்மையான நல்ல மனஉருதியோ டிருத்தல். இவற்றிற்கு உடன்பட்டு அவ்விதமே அவரிடம் கொடுத்தேன், தெளிக. மனமகிழ்ச்சியுடன் நீ என்னையே பார்த்துக்கொண்டிரு நானும் பொருந்துமுறையில் உன்னைப்பார்த்திருப்பேன். இதுதான் என் உப தேசம் அறிவாய் என்றனர்,

31. என்றவணம் அவரென்னைத் தியானநோக்
குடன்பார்ப்பார் யானும் அப்போ
தென்றினைக்காண் வனசமென மலரும்அவர்
முகமேபார்த்திருப்பேன் தாயே
இன்றவைபோல் யானுனைநோக் கிடுவேன்நீ
யெனைநோக்கியிருத்தி யுள்ளம்
ஒன்றுபட இதுவேஎன் உபதேசம்
எனஅவளுக் குரைத்தார் சாயி.

(போ-ரை) என்றபடியே அவர் என்னைத் தியானப்பார்வையுடன் பார்ப்பார். நானும் அப்பொழுது சூரியனைக்கண்டு மலருந் தாமரை மலர் போல அவர்முகமேபார்த்திருப்பேன். அத்தன்மைபோல யான் இன்று உன்னைப்பார்த்துக்கொண்டிருப்பேன் தாயே ! நீயும் மனம் ஒன்றுபட என்னையே பார்த்துக் கொண்டிருப்பாயாக. இதுவே என் உபதேசம் என்று அவளுக்குச் சாயி கூறினர்.

32. அம்மொழிகேட் டவ்வணமே யவர் கருணை
நோக்கினைப்பெற் றகன்றாள் அன்னாள்
வெம்மைசெயைம் புலக்காட்டை வெட்டியெறிந்
தானந்த வெள்ள மூழ்கி
யிம்மையினிற் பெறற்கரிய மானுடயாக்
கையின்பயனை யெய்த லுற்றாள்
செம்மைநெறி திறம்பாதோர்க் கருள்புரியுஞ்
சாயிதவத் திறனால் மாதோ.

(போ-ரை) அந்தவார்த்தையைக்கேட்டு அவ்விதமே அவருடைய திருவருட்பார்வையைப் பெற்று நீங்கினாள். அவள் கொடுமைசெய்கின்ற ஐம்புலக்காட்டைவெட்டி வீசி இன்பவெள்ளத்தில் மூழ்கிச் செம்மையான மார்க்கத்தினின்றும் பிறழாதவர்க்கு அருள்புரியும் சாயியின்தவவலிமை யினாலே இப்பிறப்பிலே பெறுதற்கரிய மானுடயாக்கையின் பயனை அடையலானாள்.

# அரிவினாயகசாடேவுக்கு மக்கட்பேருசீர்வாதம்

33. காசினியில் உயர்அகமத்சில்லா டிப்டிக்
கலெக்டரெனும் அரிவினாயகசாடேதன்
நேசமனை சிறுமியரோ ரிருவர்ப் பெற்று
நிமலனடி யடைதல்கண்டு நெஞ்சம் மாழ்கித்
தேசுறுபா ரியையிழந்த எட்டாண் டின்பின்
செல்வனிலாக் குறையதனைத் தீர்க்க எண்ணி
மாசறுபின் மணமதனை விழைதல் உற்றும்
வளர்மூப்பின் மணமதனல் வருங்கே டாய்ந்து

(பொ-ரை) பூவுலகில் உயர்ந்த அகமத்சிலலா டிப்டிக் கலெக்டர் என்கின்ற அரிவினாயகசாடே என்பவர் தம் அருமைமனைவி இரண்டு பெண் மக்களைப்பெற்று அவர்களுடன் இறைவனடி அடைந்தமைகண்டு மனம்வருந்தி ஒளிபொருந்திய மனைவியை இழந்த எட்டாண்டுகளின் பின் மகனில்லாக்குறையை மாற்றக்கருதி, இரண்டாவதுமணத்தைச் செய்யவிரும்பியும், பெருகும் மூப்புப்பருவத்திற்செய்யும் மணத்தால் வருங்கேட்டை ஆலோசித்து,

34. புரிவதெவன் வயதோநாற் பத்தொன் பானைம்
பொறிதளரும் பருவம்மணம் புரிந்திட் டாலும்
பரிவுறுநற் சுதற் பெறல்நிச் சயமோ என்று
பலபலசிந் தித்தரிய பரஞா னத்தால்
தெரிவுறமுக் காலமுணர் துறவோர் ஆசி
செப்பிமணம் புரிகவெனிற் செய்வேன் என்று
விரிவுறுதன் மனத்திலெணிச் சாயி பாதம்
விரைந்துதொழச் சீரடியூர் மேவி னனே.

(பொ-ரை) கலியாணஞ் செய்துகொள்வது எவ்விதம்? வயதோ நாற்பத்தொன்பதாகிறது. ஐந்துபொறிகளும் தளர்கின்ற பருவம்; கலியாணஞ்செய்தாலும் விருப்பமிகும் நன்மகனைப் பெறுதல் உறுதியோ? என்று பலவாறாக எண்ணி உயரிய தெய்வஞானத்தால் முக்காலமும் நன்கு உணரும் துறவோர் ஆசிகூறிக் கலியாணஞ்செய் என்று சொன்னாற் செய்துகொள்வேன் என்று தன பரந்த மனத்தில் முடிவுபண்ணிச் சாயிபாபா திருவடிகளை விரைந்து வணங்கச் சீரடியூர் பொருந்தினர்.

35. மேவுமிவன் சாயிபதந் தொழுது மீளும்
வேளையிவ னுடன் போந்த மெய்ம்மை நண்பன்
ஆவலுடன் ஆண்மகவிங் கிவற்கில் லென்ன
அருட்பாபா மணம்புரியின் அடைவன் என்றார்

தேவுரையீ தெனக்கொண்டு மணஞ்செய் தான்அத்
தேவியிடத் திலும் பெண்ணே செனித்தல் கண்டு
தாவில் அவன் மாதுலனுந் தாதா கேல்கர்
சாயிசரண் சார்ந்ததனைச் சாற்றி னனே.

(போ-ரை.) சீரடியூர் பொருந்திய இவர் சாயிபாபா திருவடிகளைத் தொழுது திரும்புஞ்சமயம் இவருடன் துணையாய்ச்சென்ற உண்மை நண்பன், பாபாவிடம் இவர் பிரியப்படும் ஆண்மகவு இவருக்கு இல்லை யென்று சொல்லியதைக்கேட்ட பாபா கலியாணஞ்செய்தாற் கிடைக்கும் என்றார். இத்தெய்வமொழியை நம்பிக் கலியாணஞ்செய்தனர். அப் பெண்ணிடத்திலும் பெண் குழந்தையே பிறத்தல் கண்ட அவர் மாமனார் தாதாகேல்கர் என்பார் பாபாதிருவடிசார்ந்து இவ்விவரத்தைத்தெரிவித்தார்.

36. அவ்வுரைகேட் டருள்சாயி அவட் கோ ராண்டில்
ஆண்மகவு பிறக்கஅல்லா அருள்வா ரென்று
செவ்வன்உரைத் தனரதுபோற் பிறந்தான் மைந்தன்
செனித்தஅவன் வளர்ந்து கலவி தேர்ந்து பின்னர்த்
திவ்வியராவ் பகதூரென் றுரைக்கும் பட்டஞ்
செகத்திலுற்றுப் பூனவிற் சிறந்து வாழ்ந்தான்
கவ்வையிலாத் தவப்பாபா புரிந்த சித்தி
களிலினும்யான் அறிந்தவரை கழறுவேனே.

(போ-ரை.) அவ்விவரத்தைக் கேட்ட அருட்சாயி அவளுக்கு ஓராண்டில் ஆண்மகவு அல்லாவின் திருவருளாற் பிறக்கும் என்று செம்மையாகக் கூறினர். அதுபோலவே குமரனும் பிறந்தான். அம் மகன் வளர்ந்து கல்வியிற் றேர்ச்சிபெற்றுப் பின்னர் ராவ்பகதூர் என்ற பட்டமுமடைந்து சிறப்புடன் பூனவில் வாழ்ந்துவந்தான். துன்ப மில்லாத் தவப்பாபா செய்த அற்புதச் செயல்களில் இன்னும் சிலவற்றை அறிந்தவரையிற் கூறுவேன்.

## நானசாகேபு சந்தோர்க்கரை வலிந்தாட்கொண்டது.

37. சித்திபல புரியுமிவர் வலியத் தாமே
தேடியழைத் துபதேசஞ் செயப்பெற் றுள்ள
உத்தமர்சில் லோரவருட் கல்வி செல்வம்
உயர்வொழுக்கங் குலமிவற்றில் ஒப்போர் இல்லா
தெத்தலத்துஞ் சிறந்திடுகல் யாணென் றோதும்
எழிற்பதிவாழ் இருபிறப்போன் இசைமிக் கார்ந்தோன்
தத்துவநூ லுணர்வுறுநா னசா கேபு
சந்தோர்க்க ரெனுமொருவன் றன்மை சொல்வேன்

(போ-ரை.) பலவகை அருட்சித்தி புரியும் நம் சாயி தாமாகவே வலியச்சென்று அழைத்து உபதேசஞ்செய்து ஆட்கொள்ளப்பட்ட உத்தம மக்கள் சிலர். இவருட் கல்வி செல்வம் உயர்ந்த ஒழுக்கம் குலம் இவற்றில் நிகரற்று எவ்விடத்தும் சிறப்பான கல்யாண் என்றழைக்கப்படும் அழகிய பதியில் வாழ்கின்ற இருபிறப்பாளரும் கீர்த்தி வாய்ந்தவரும் தத்துவ நூலுணர்ந்தவருமான நானுசாகிப்சந்தோர்க்கர் என்பவரொருவர் இயல் பைச் சொல்லுவேன்.

38. ஆங்கிலத்தில் உயர்பட்டப் பரீக்கைதேறி
அரசாங்க வுத்யோகத் தவரில் மேன்மை
தாங்குதவிக் கலெக்டரென அகமத் சில்லா
தழைக்க வந்து கோபர்க்காம் சமாபந்திக்குப்
பாங்குடன்சென்றுள போதப் பாகுல் கர்ணி
பாபாவாழ் சீரடியாம் பதியில் வாழ்வோன்
ஆங்கதற்குச் செல்லும் வணஞ்சாயி சந்நி
தானத்தை யடைந்து விடையளிப்பீரென்று.

(பொ-ரை.) ஆங்கிலத்தில் உயர்ந்தபட்டப் பரீட்சை தேர்ந்து அர சாங்க உத்தியோகஸ்தரில் மேன்மை வாய்ந்த உதவிக்கலெக்டர் என அக மத்சில்லாவில் சிறப்புற்ற கோபர்க்காம்சமாபந்திக்கு முறைப்படி சென்று ள்ள காலத்தில், பாபா வாழ்கின்ற சீரடியில் தங்கியுள்ள அப்பாகுல் கர்ணி என்பவன் சமாபந்திக்குப் போய்வரும் வணணம் சாயி சந்நிதா னத்தை அடைந்து விடைகொடுக்கும்படி வேண்டினன்.

39. வேண்ட விடை யளித்து டிப்டிக் கலெக்டரென்ன
விளம்பிடும் நானுவையிங்கு விரைந்து போந்தெற்
காண்டிடச்சொல் லெனப் புகல அன்னோன் அந்தக்
கலெக்டரையெப் படியழைக் கக்கடவன் நாயேன்
ஆண்டெனச் சொற் றிடயானிங் கழைத்தேன் என்ன
அறைந்திடுதி வருகுவனிங் கவனென் றோத
ஆண்டவ கட்டளை யென்று தொழுது சென்றவ்
வதிகாரிக் காங்கதனை யறிவித்தானே.

(பொ-ரை.) வேண்டியதற்கு இணங்க விடைகொடுத்து டிப்டிக் கலெக்டர் என்று கூறப்பட்ட நானுவை இங்கு விரைவில் வந்து என்னைக் கண்டுபோகச்சொல் என்று சொல்ல, அவனும் கடையேன் நான் எவ்விதம் அவரை அழைத்ததாகக் கூற முற்படுவேன் என்று பதில்மொழிய நான் இங்கு அழைத்தேன் என்று கூறின் இங்கு வருவான் என்று கூற, இறை வனே அவ்விதமே சொல்லிவரச் செய்வேன் என்று அதிகாரியிடம் போய் அவ்விதமே தெரிவித்தான்.

40. அன்னவன்சொன் னதை நம்பாக் கலெக்டர் என்னை
அறியாத பக்கிரியங் கழைத்தற் கேது
என்னை யென்றுள் ளெண்ணியிவன் றனக்கங் கென்னால்
எதுவேனும் பெறக்கருதி யியம்பி னுனென்
றந்நகர்க்கே காதிருந்தான் பின்னுஞ் சாயி
அடுத்தடுத்தங் கிரண்டுமுறை அழைத்தல் ஓர்ந்து
துன்னியிதை யறிவனென்றந் நகர்க்குச் சென்று
தொழுதென்னையீங் கழைத்தவகை சொல்க என்றான்.

(பொ-ரை.) இங்ஙனந் தெரிவித்ததைக்கேட்டு நம்பாத கலெக்டர். என்னைத் தெரியாத பக்கிரி ஆங்கு என்னைவரவழைப்பித்தற்குக் காரணம் இல்லையே. ஒருவேளை வந்திருப்பவன் அவர்மூலம் என்னால் ஏதாவது காரியசித்தி பெறப் பாபாபால் தெரிவித்திருக்கக்கூடும் என்றெண்ணி அவர், பாபா சீரடிக்குச் செல்லாதிருந்தார். மேலும் தொடர்ந்து இருமுறை தம்மை வரும்படி சொல்லியனுப்பியதை யறிந்த நானு சீரடி சென்று உண்மை யுணர்வேன் என்று பாபாவினிடம் போய்ப் பணிந்து என்னை அழைத்த காரணம் என்ன வென்று கேட்டார்.

41. வையகத்திற் பலரிருக்க நின்னை மட்டும்
வரவழைத்தற் கேதுளதை மறந்தாய் போலும்
பொய்யுலக வாழ்க்கையெனும் மயலில் ஆழ்ந்து
புவியதனில் ஈரிரண்டாப் புகல்சன மத்தின்
ஐய மிலாத் தொடர்பெனக்கும் நினக்கும் உண்டென்
றறிதிஅவ காசமுள அந்நா ளெல்லாம்
மைய லொழித் தெனைக்காண வருதி யென்று
வழுத்திவிடை தரமீண்டான் மாண்பு மிக்கான்.

(பொ-ரை.) இவ்வுலகத்தில் மக்கள் பலரிருக்கையில் உன்னை மட்டும நான் வரவழைப்பதற்குக் காரணம் இருக்கும் என்பதை மறந்தாய் போலும். பொய்யான உலக வாழ்க்கையாகிய மயக்கத்தில் ஆழ்ந்துள் ளவனே! நான்குபிறப்புக்களாக உனக்கும் எனக்கும் தொடர்புண்டு என் பதை நீ அறிவாயாக. உனக்கு ஓய்வு வாய்க்கும் பொழுதெல்லாம் என்னைக் கண்டு போவாய் என்ன ; அங்ஙனமே துதித்து விடை பெற்றுத் திரும் பினர் மாட்சிமை மிகுந்த நானு.

42. சாயிமொழிந்தது கேட்டவுடனே நானு
சாகேபு சந்தர்க்கார் தரணி தன்னில்
மாயையொழித்திடுமிவர்தம் பாலிங்கேதோ
மகிமையுளதெனத் தனது மனத்தின் எண்ணி

நேயமுடன் மீண்டான்பின் இவர்பாலெய்த
நினைந்திலான் வலிந்தாட்கொள் நியமம்பூண்டோ
ராய இவர் விடுவாரோ சின்னாட் சென்றங்
கரிய பிளேக்கெனும் நோய்வந்தணுகிற்றன்றே.

(போ-ரை.) சாயியின் வசனத்தைக் கேட்டவுடன் நாளு சாஹிப் சந்தர்க்கார் பூமியில் மாயையைப்போக்குகின்ற மகிமைவாய்ந்த இவரிடம் ஏதோ சித்துளது என்று மனத்தில் எண்ணித்தம்மிடம் நேயமுடன் திரும்பியவர் சாயியையடைய எண்ணமில்லாதவராயினர். எனினும் தகுதி வாய்ந்தவரை வலிய ஆட்கொள்ளும் தன்மையுற்ற சாயி இவரைவிட்டு விடுவாரோ (இல்லை). சிலநாட்களின் பின் நாளு வேலைபார்த்தநகரில் கொடிய பிளேக்நோய் பரவலாயது.

43. வந்தநோய் தீரும்வண்ணம் மாநகருள்ளோர் யாரும்
இந்த நாளம்மை குத்தல் ஏற்கவென்றே கலெக்டர்
முந்துறப் பணித்தார் அந்தமொழியினைக்கேட்டுள் அச்சஞ்
சிந்தையிற் கொண்டவ்வூரார் சென்றிலர் சிகிச்சையேற்க

(போ-ரை.) வந்த பிளேக்நோய் தீரும்வண்ணம் (பெரிய) நகரிலுள்ளவர்கள் யாவரும் பிளேக்அம்மை குத்திக்கொள்ளவேண்டுமென்று ஜில்லாக் கலெக்டர் உத்தரவு பிறப்பித்தார். அந்நகரத்திலுள்ள ஜனங்களோ அந்த உத்தரவைக்கேட்டுப் பயந்து அம்மை குத்திக்கொள்ளப் பின்வாங்கினர்.

44. அச்செயல் உணர் கலெக்டர் ஆணைசெய்தனராங்குள்ள
விச்சைடிப்டிக் கலெக்டர் விழைந்தம்மை குத்திக் கொள்ளில்
அச்சமில்லாது மற்றோர் அனைவருஞ் சிகிச்சை யேற்பர்
நிச்சயம் என நாளுவை நீ பெறு சிகிச்சை யென்றார்.

(போ-ரை.) அந்தச் செய்கையையறிந்த ஜில்லாக் கலெக்டர் அங்கேயுள்ள கல்வியிற் சிறந்த டிப்டிக்கலெக்டர் விரும்பித் தாம் முதலில் அம்மை குத்திக்கொண்டால் அந்நகரத்திலுள்ள மனிதர்களெல்லோரும் பயமில்லாமல் அம்மை குத்திக் கொள்வார்களென்று கருதி டிப்டிக் கலெக்டராகிய நாளுவை உறுதியாக நீ அம்மை குத்திக்கொள்ள வேண்டுமென்று உத்தரவிட்டார்.

45. சொல்லும் அவ்வார்த்தை கேட்ட தகளறு நாளு வுள்ளத்
தல்லலுற்றம்மை குத்த லால்வருமோ தீங்கென்று
நல்லுடல்பதறி யார்பால் நவின்றிதைத்தெளிவனென்றெண்
எல்லையிற் சாயிபாபா எண்ணம் வந்தது மகிழ்ந்தான்.

(போ-ரை.) கலெக்டர் சொன்னதைக் கேட்ட நடுக்கமுற்ற குற்ற மில்லாத டிப்டிக்கலெக்டர்ஆகிய நானு அம்மை குத்துவதால் யாது தீமையுண்டாகுமோ என்று மெய்துடித்து இதன் உண்மையை யாரிடங் கேட்டுத் தெளியலாம் என்று எண்ணமிடும்பொழுது, சாயிபாபாவின் நினைவு வந்தது. மகிழ்ச்சியுற்றார்.

46. எழுந்தனன் விரைந்தெழில்மிகு சீரடியினில்வாழ்
செழுந்தவர்க்கரசாகிய சாயியின்றிருத்தாள்
விழுந்தெழுந்தனன் விளம்பு முனுணர்ந்த மெய்ஞ்ஞானக்
கொழுந்தனுர் பயங்கொளா தம்மைகுத்திக்கொள் என்றார்.

(போ-ரை.) உடனே புறப்பட்டு விரைவாக அழகுமிகுந்த சீரடி யில் வாழ்கின்ற பெருந்தவராஜரான சாயிபாபாவின் திருவடியில் விழுந்து எழுந்து (தாம் வந்தசெய்தியைச்) சொல்லுவதற்குமுன்னமே அறிந்துகொண்ட, மெய்ஞ்ஞானக் கொழுந்தை ஒத்தவராகிய பாபா (அன்ப!) அச்சமில்லாமலே அம்மை குத்திக்கொள் என்றார்.

47. அந்த வாசகஞ் செவியுறக் கேட்டகமகிழ்ந்து
சிந்தையாகுலந் தீர்ந்துளந் தெளிந்துதன் ஊர்க்கு
வந்து கட்டி நோய் மருவிடா வணஞ்செயும் வகைதான்
முந்தி யேற்றனன் அம்மைகுத்திக்கொளல் முறையே.

(போ-ரை) அந்தச்சொல்லைக் காதாரக்கேட்டு மனம் மகிழ்ந்து மனத்துயரொழிந்து மனம்தெளிந்து தம் ஊருக்குவந்ததும் கட்டிநோய் வாராமறறுடுத்துக் காக்கும் வகையினதாகிய அம்மைகுத்துதலை முறையே யாவர்க்கும் முன்னதாகத் தாமே மேற்கொண்டு செய்தார்.

48. எற்ற இன்னவர்க் கிடர்செயுங் காய்ச்சல் வீக்கங்கள்
தோற்றி டாமையால் மற்றையர் யாவருந் துணிந்து
தேற்ற முற்றவண் சிகிச்சையேற் றனருயிர் சிதையப்
பாற்றும் அப்பிணி பரவுறு தொழிந்ததப் பதியில்.

(போ-ரை.) இங்ஙனம் அம்மைகுத்திக் கொள்ளப்பட்டவர்க்குத் துயர்விளைக்குங் காய்ச்சலாவது வீக்கமாவது காணுமையைக்கண்ட பொது மக்களனைவரும் மனம்துணிந்து முன்வந்து சிகிச்சை செய்து கொண்டார்கள். உயிரைக்கெடும்படி வருத்திப்பிரிக்கும் அந்த நோய் நகரிற்பரவாது ஒழிந்தது.

49. நகருளாரகமுவந்தனர் ஆங்கு நானுவும்
மிக மகிழ்ந்தனன் மேதகு முன்செல்வோனென்னும்
தகவுறும்பெயர் தன்னுடன் சீர்த்தியுஞ் சார்ந்த
இகழ்வுறுவிவற் கியைந்தது சாயிபத்திமையே.

(போ-ரை.) நகர மக்கள் யாவரும் மனம் மகிழ்வடைந்தனர். அவ்விடத்து நாஞவும் மிகமகிழ்ந்தனர். எவருக்கும் முற்பட்டுக் காரியஞ் செய்பவர் என்னும் தகுதி பொருந்தும் நற்பெயரும் புகழுஞ் சேரப்பட்டு உயர்வுற்ற இவர் சாயிபத்தியிலும் தலை சிறந்து விளங்கினர்.

### நானு யாத்திரை செல்லல்

50. பத்தி மீக்கொளு மிவர்க்குநற் பயன்றருபதிகட்
குத்தமப் பெரியாருடன் யாத்திரை யுளுற்ற
நித்தம் எண்ணம் உண் டாங்கொரு வேனிலில் நெடிய
மத்தவாரண வுரியினன் கோயில்கொள மாண்பார்

(போ-ரை.) பத்திமிக்க இவர்க்கு உத்தம குணம் பொருந்திய நண்பர் கூட்டத்துடன் புண்ணியப்பதிகட்கு யாத்திரை போய்வர வேண்டும் என்ற எண்ணம் எப்பொழுதும் உண்டு. அதற்கு எற்ப ஒரு வேனிற்காலத்தில் நீண்ட யானைத்தோலுடையவனுகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்குஞ் சிறப்பமைந்த.

51. ஏமகூடமும் பொதியமும் அலால்இணை யில்லா
வாமம் ஆர் அரிச் சந்திரமலையென வழங்கும்
நாம மால்வரை யுச்சிசெல் வானிவன் நயந்து
சோம னேர்நண்ப ருடன்செலும் போதினிற் சுடரோன்

(போ-ரை.) ஏமகூடமலையும் பொதியமலையுமல்லாமல் வேறெதுவும் இணையாகாத அழகுமிக்க அரிச்சந்திர மலையென்று பெயர் விளங்கும் பெரிய மலையுச்சிக்குச் செல்லவேண்டு மெனக் கருதிச் சந்திரனை யொத்த நண்பர்களுடன் செல்கின்ற வேளையிற் சூரியன்,

52. வெம்மை யாற்பசி தாகமுமிகுந்து நீர் விழைந்து
தம்மின் நீர்மிகு தாகத்தால் நடைமிகத் தளர்ந்தேன்
செம்மை நண்பர்கா ளென்றலும் அவரங்குத் தேடி
எம்மை நீர்தரு கென்றனிர் காண்கிலேம் என்றார்.

(போ-ரை.) வெப்பத்தினல் பசியுந் தாகமும் அதிகப்பட்டு நண்பர்களைப் பார்த்துச் செம்மை நண்பர்காள் நீங்கள் நீரைவிரும்பித்தாகத்தால் நடை மிகத்தளர்ந்துள்ள எனக்கு எங்காவது சென்று நீரைக் கொண்டு வந்து கொடுங்கள் என்று கூறுதலும், அவர்கள் அவ்விடம் தேடிப்பார்த்து எங்களைத் தண்ணீர் கொண்டு வருக என்கிறீர், தண்ணீரை எவ்விடத்தும் தேடியுங் காண்கிலமே என்றார்கள்.

53. என்ற போது பாபாவின் எண்ணம் உதித்துப் பாபா இங்
கென்றன் அருகில் இருந்தால்நீர் எவ்வாற்ருனும் ஈகுவரே
மன்றனைக்கின் றெனப்புகலும் வார்த்தையினைக்கேட்டொரு [நண்பர்
நன்று பாபா இருந்தாலென் றுரைக்கும் மாற்றம் நகைப் [பாமே

(போ-ரை.) என்று சொல்லிய காலத்தில் பாபா வின் நினைவு பிறத்தலும் இவ்விடம் என்சமீபம் பாபா இருந்தால், உறுதியாக எவ்விதமேனும் நீரைக்கொண்டுவந்து கொடுப்பாரே என்று பேசும் வார்த்தையைக் கேட்ட நண்பர்களில் ஒருவர் பாபா இருந்தால் நன்ருயிருக்கும் என்னும் பேச்சு நகைப்புக்கு இடமானதே.

54. இருந்தா லன்ருே நீர்தருவர் இவ்வாத்தையினுற் பய [னில்லை
வருந்தா தேற முடியுமெனில் வருகஇன்றேல் வரை [யிழிந்து
பெருந்தா ரணிக்கே குகவென்று பேசுங்காலைச் சீரடியில்
மருந்தா யடியார்க் குறுதுயரம் மாற்றுஞ்சாயிஅதையுணர்ந் [தார்

(போ-ரை.) இவ்விடம் இருந்தாலல்லவா நீர் கொடுப்பார், இந்தப் பேச்சாற் பயன்யாது? வருத்தமின்றி மேலே ஏறி வரக்கூடுமானுல் ஏறி வாரும், முடியாதாயின் மலையினின்றும் இறங்கிக் கீழே தரைக்குப் போய் விடும் என்று சொல்லும்பொழுது அடியவர்க்கு உற்றதுயரம் துடைக்கும் மருந்துபோன்றவரான சாயிபாபா அதைச் சீரடியில் உணர்ந்தார்.

55. அந்தோ நாஞ நீர் நீரென்றவதிப்படுகின்ருனவனுக்
கிந்தா நீ ரென் ருெருசிறிதிங் கீதல் வேண்டும் எனப் [புகன்ருர்
வந்தாங் கருகி லுறை பத்தர் வழுத்துஞ்சாயி வார்த்தையைக் [கேட்
டந்தாரணிமார் பினர்நாஞ அருகிலிலாத போதவர்தம்.

(போ-ரை.) ஐயோ! நாஞ தண்ணீர் தண்ணீரென்று கஷ்டப் படுகின்ருர்...அவருக்குத்தாகந்தீர்க்கச் சிறிது தண்ணீரைக் கொடுக்க வேண்டும் என்று சொன்ஞர் பாபா. சாயிபாபாவின் பக்கத்தில் தங்கியிருந்த நண்பர்கள் சாயி சொல்லிய பேச்சைக் கேட்டு, அழகிய மாலையணிந்துள்ள நாஞ பக்கத்தில் இல்லாதபொழுது அவருடைய,

56. தாகத்தினைப் பற்றிய பேச்சுத் தானென்னிவர்க் கென்றுள [நினைந்தார்
மோகத் தழலில் வீழ்ந்தவிவோர் முக்காலத்தும் நிகழ் [செயலை
ஆகத்தகக்கண் ணாலறியும் அரியதவத்தர் நிலையதனைத்
தேகத்தினைத்தா னெனநினையுஞ் செயலோர்க் குணருந் [திறன் உண்டோ.

(போ-ரை.) தாகத்தினைப் பற்றிய பேச்சு இவரிடம் என் பிறக்க வேண்டும் என்று மனத்தில் எண்ணினார்கள். காமம் (ஆசை) என்னும் நெருப்பில் விழுந்து கெடுகின்றவர் உடம்பையே ஆத்துமாவென்று கருதும் இயல்புடையோர் ஆகிய இவர்கட்கு உடம்பிலுள்ள மனக் கண்ணால் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்றுகால நிகழ்ச்சிகளையும் அறிந்துரைக்கவல்ல பெரிய தவத்தினர் நிலைமையை அறியுந்திறமுண்டாகுமோ ? இல்லையென்றபடி.

57. மலையிற் றாகத் தால்மெலிந்து வருந்தும்நாணு சாகிபுமுன்
னிலையிற் "பீல்"சா தியனொருவன் நேர அவனைக்கண் [டிந்தச்
சிலையில் தண்ணீ ருள்ள இடஞ் செப்பாய்நண்ப எனவினவக்
கலைவிற்பனரே தாமிருக்குங் கற்பா றையின்கீ ழுளதென் [றான்

(போ-ரை.) மலையில் தண்ணீர்த்தாகத்தால் வாடிவருந்தும் நாணு சாகிப் எதிரில் பீல்சாதியானொருவன் வர, அவனை நோக்கி, நண்ப ! இம்மலையில் நீருள்ள இடந் தெரிவிப்பாய் என்றுகேட்க அவன் கலையுணர்ந்தவரே ! தாம் தங்கியிருக்கும் கற்பாறையின் அடியில் நீர்இருக்கிறதே என்றான்.

58. வரையில் எதிர்ந்தோன் அவண்புகன்ற மாற்றங்கேட்ட [நாணுவின்
புரையில் நண்பர் எழுந்துடனே புனலுள்ளதெனப் புக [வந்தத்
தரையிற்பதிந்த கற்பாறை தன்னைப்பிரயாசத்துடனே
விரைவிற்புரட்ட அதனடியில் வியப்பவொருவன் நீர் [வேட்கை.

(போ-ரை.) மலையில்வந்தவன் அவ்விடம் சொன்ன வாசகத்தைக் கேட்ட நாணுவின் குற்றமற்றநண்பர் உடனே எழுந்து நீர்இருக்கிறது

என்று சொல்லப்பட்ட அந்தப்பூமியிற் பதிந்திருந்த கற்பாறையை விரைந்து பிரயாசைப்பட்டுப் புரட்டுதலும், அதன்கீழ் ஆச்சரியப்படும்படி ஒருவனுடைய நீர்வேட்கையை.

59. மாற்றும்புனலே இருந்ததனை வாரிப்பருகி நானுவும்
சாற்றஅரிய கடுந்தாகந்தணிந்து சயிலச் சிகரமிசைத்
தோற்றும்பரன்றன் கோயிலுற்றுத்தொழுது துணைவருடன்
[மீண்டான்
போற்றுந்தகையோன் இவன்சின்னுட் போய பின்றைச்
[சீரடியூர்.

(போ-ரை.) தணிக்கும் நீரேயிருந்தது. நானு அதைக்குடித்துச் சொல்லுதற்கரிய கொடிய தாகந்தணிந்தவராய் மலையுச்சியில் விளங்கும் கடவுட்கோயிலை அடைந்து வணங்கி நண்பர்களுடன் திரும்பினுர். யாவரும் போற்றத்தகுந்த தன்மையையுடைய இந்த நானு சிலநாட்கழிந்த பின் சீரடியென்னும் ஊருக்கு

60. சென்று சாயி பதந்தொழுதார். தெய்வம்அனையார் சிலை
[யின்மிசை
அன்று தாகத் தால்மெலிந்தாய் அந்நீம் புனல்கிட் டிய
[தோவென்
றென்று கருணை யுடன்வினவ வொன்றுந் தோன்று துள
[மயங்கி
நன்று நானெண் ணியதுணர்ந்து நன்னீர் தந்தோர்
[இவர்தாமே.

(போ-ரை.) போய், சாயிபாபாவின் திருவடிகளை வணங்கி நின்றுர். தெய்வத்தன்மைவாய்ந்த சாயி, மலையின்மீது அக்காலம் தண்ணீர்த்தாகத்தால் வருந்திஞயே, அழகிய நல்லதண்ணீர் கிடைத்ததா? என்று பொருந்தியகருணையுடன் கேட்க, செய்வதொன்றும் அறியாது மனங்கலங்கி நல்லது : நான் கருதியதை அறிந்து அன்று தண்ணீர் கொடுத்தவர் இவரே.

61. என்னநினைந்து பரவசப்பட்டிருகண்ணிலும் நீர் துளும்ப
[நின்றுன்
அன்னதுணர்ந்த பாபாவின் அருகிலுளோரன் றவராங்குச்
சொன்ன மொழியையவர்க் குரைத்துச் சுரும்பு சென்றிங்
[கருகிலிலார்க்
கென்னையிவர் நீர் தருவதென இகழ்ந்தெண்ணியதம் இயல்
[பிகழ்ந்தார்.

(போ-ரை.) என்னக்கருதிப் பரவசமடைந்து கண்களிரண்டிலும் தண்ணீர்ததும்ப நின்றனர். இதனையறிந்த பாபாவின் பக்கத்திலுள்ளவர், முற்காலம், பாபா அவ்விடஞ் சொல்லியவார்த்தையை நானுவிடம் கூறியதுடன் பக்கத்திலில்லாது மலையிற்போயிருப்பவர்க்கு இவர் நீர் கொடுக்கமுயல்வது என்னகாரியம் என்று இழிவாக நினைத்த தம் இயல்பை இகழ்ந்துங் கூறினர்.

62. பீல் சாதியனென வந்தெளியேற்குப் பெருவெற்பின்
மேலார்நீர் தந்தின்னுயிருய்யும் விதஞ்செய்தீர்
மாலாதியதீர்த் தேழையை யீண்டு வலிந்தாட்கொள்
நாலாகிய மறைதந்தவன் மானும்நலத் தீரே.

(போ-ரை.) பீல்சாதியானாக வந்து எழையாகிய எனக்குப் பெரிய மலையிலுள்ள மேன்மையான தண்ணீர்தந்து (எனது) இனிய உயிரைப் பிழைக்கும்படிசெய்தீர். மேலும் நான்காகிய வேதங்களைத்தந்தகடவுளை யொத்த நலத்தையுடைய நீரே, என்னிடம் பொருந்திய மயக்கத்தைப் போக்கி எளியேனை வலியத்தடுத்து ஆட்கொண்டீர் என்றார்.

நானுவின் மற்றொருயாத்திரை

63. என்று பலப்பல பன்னி வணங்கி யெழிற்றன்னூர்
சென்றசி லுளிலொர் யாத்திரை பின்னுஞ் செயஎண்ணித்
துன்றிய டர்ந்தவ னத்தினி லுள்ளது தும்பிக்கை
வென்றிவி நாயகன் ஆலயம் ஆங்கு விழைந்தேகி

(போ-ரை.) என்று பலபடியாகச்சொல்லி வணங்கித்தம் அழகிய ஊர் சென்றசில நாட்களில் மீண்டும் ஓர்தலயாத்திரைசெய்யக்கருதி மிக நெருங்கிவளர்ந்தகாட்டிடையே உள்ள தும்பிக்கையுடைய வெற்றி தரும் விநாயகன் கோவிலுக்கு விரும்பிச் சென்று,

64. அருள்மிகு பத்மா லயகண பதியை
யன்புடன் றொழுதிட ஆங்குத்
தெருண்மிகு நண்பர் நால்வரோ டொருங்கு
செல்வுழிக் கதிர்குட திசைச்சென்
றிருள்மிகப் பரந்த தவ்வழிச் சகடம்
இன்மையாற் கால்நடை யினராய்
மருள்தரும் இரவில் வழிநடந் திளைத்தார்
வந்தன பசியொடு தாகம்

(போ-ரை.) அருள்மிகுந்த பத்மாலய கணபதியை அன்புடன் வணங்கி அவ்விடம் அறிவு மிக்க நண்பர்கள் நால்வருடன் போகின்ற காலத்தில், சூரியன் மேல்பக்கம் மறைய இருள் மிகப்பரந்தது. அவ்வழியிற் செல்ல வண்டியாதும் இல்லாமையால் யாவரும் கால்நடையாகவே மயக்கமிக்க அவ்விரவில் நடந்து எய்த்தார்கள். பசியுந்தாகமும் உண்டாயின,

65. கோவிலி லுறையுஞ்சாது குடதிசைப் பகலோன் செல்லில்
மாவிலங் குறுமென் றஞ்சிமற்ருெருசூழல் செல்வார்
தாவிலிங்குணவ ளிப்போர்தாமில ரென்செய்வேனென்
றேவிலங் கருட்பா பாவையெண்ணினன் இதயத் துள்ளே.

(போ-ரை.) கோவிலில் தங்கியிருக்குஞ் சாதுவோ சூரியன் அத்த மித்ததுமே பெரிய வனமிருகங்கள் வருமென்று பயந்து வேருேர் இருக்கை சென்று விடுவார். கெடுதலில்லாத உணவு கொடுத்துதவுவோர் இலரே என்செய்வேன் என்று அருள்விளக்கமுற்ற பாபாவை மனதிற் சிந்தித்தார்.

66. அதிகம்இங் கொன்றும்வேன்டேன் ஆலயம் அடையுங் காறும்
கதிபெறும்விதம்ஓர் கோப்பை கருதுதேயிலைக்க சாயம்
ததியிது கிடைத்தாற் போதுஞ் சற்குரு வேயென்னும்போ
ததிசயம்உற ஓர்சத்தம் ஆலயத் தெழுந்த தன்றே.

(போ-ரை.) சற்குருவே! எனக்கு அதிகமாக ஒன்றும்வேண்டாம். கோவிலையடைவதற்குத் தேவையான பலந்தரக்கூடிய ஒரு கோப்பைத் தேயிலைக் கஷாயம் மட்டும் இப்பொழுது கிடைத்தாற்போதும் என்னும் பொழுதில் யாவரும் ஆச்சரியப்படும்படி ஆலயத்துஓர் அசரீரி பிறந்தது.

67. நாஞுவந்தாரா வென்று நவின்றிடு சாது சத்தம்
ஆனுவட் களிப்பை நல்க அப்பொழுதவர்பாற் சென்று
நாஞுடி வந்த செய்தி நவின்றதாரெனவி ஞவத்
தேனுர் சீரடியூர்ப் பாபா செலுத்தினர் வானத்தூது.

(போ-ரை.) நாஞு வந்தாரா? என்று சாது சொல்லும் சத்தமானது நீங்காத மனமகிழ்ச்சியை விளக்க, அப்பொழுதே அச்சாதுவிடம்போய், நான் தேடிவந்த செய்தியைத்தங்களிடம் தெரிவித்தவர் யார்? என்று கேட்க, தேன் பொருந்திய சீரடியூரிலுள்ள பாபா வானத்தூது அனுப்பினர் என்ருர்.

68. எனது நாஞு வருகின்ருன் இளைத்துக் களைத்து வழிநடந்து
நினது கடமை தேத்தண்ணீர் நிரம்பக் கொடுத்துப்பசியாற்றல்
மனது மகிழ்ந்திச் செயல்புரிக வருந்தா தன்பற் கென்றதனுல்
உன்து பசியும் உடன்வந்தோருற்ற பசியுந்தீர்க்கும் வணம்

(போ-ரை.) என்னுடைய நாஞு வழிநடந்து இளைத்துக்களைத்து வருகின்ருன். அவனுக்குத்தேத்தண்ணீர் நிரம்பக்கொடுத்துப் பசியாற்றுவது உனது கடமை. அவ்வன்பனுக்கு இக்காரியத்தை மனம் வருந்தாமல்

வகிழ்ச்சியுடன் செய்க என்றனர். அதனல் உனதுபசியுடன் உன்னுடன் மந்திருப்பவர் பசியையும் ஆற்றும் வண்ணம்;

69

இங்கு தயாரித்தனன் நீவிர் எவரும் பருகத்தேத்தண்ணீர்
சங்கையிலாதென்றச்சாது சாற்றக்கேட்ட நாஞவும்
அங்கு மிகுந்தவியப்பினை யுற்றநீர்பருகிப்பாபாவின்
பொங்குகருணை தனைநினைந்துபுரிந்தான் அவர்க்குப்பல பணியே

(போ-ரை.) நீங்கள் யாவரும் குடித்துத்தாகசாந்தி செய்யும்படி யான அவ்வளவு தேத்தண்ணீர் இவ்விடம் தயாரித்துள்ளேன் என்று அச் சாது சந்தேகமில்லாது சொல்லக் கேட்ட நாஞவும், அவ்விடத்தில் மிக்க வியப்படைந்து அத்தேத்தண்ணீரைக் குடித்துப்பின் பாபாவின் பெருகும் அருட்டிறத்தை எண்ணி அவர்க்குப் பலபல பணிவிடைகள் செய்து வந்தனர்.

70

சர்க்கார்தொழில்கள் முதலாகத்தான் செய்கருமம் அனைத்தினையும்
எக்காலமுஞ் சாயியின்றிருவாக் கினைப் பெற்றே செய்திடு வனிவன்
மைக்காரனையார் விடைவேண்டி மற்றோர் பயணஞ் செயநினைந்து
தக்கோனன அரிபஜனை தனைச்செய்யொருவனுடன டைந்தான்

(போ-ரை.) தாம் செய்யும் துரைத்தனக்காரியம் முதலான எல் லாக் காரியங்களையும் எக்காலத்திலும் சாயிபாபாவின் சம்மத மொழியைப் பெற்றேசெய்திடுவர். கார்மேகவள்ளலாகிய சாயியிடம் அனுமதிபெற்று மற்றோர் யாத்திரை செய்யக்கருதி அரிபஜனை செய்கின்றதற்காக ஒரு வருடன் சீரடி செல்லலானர்.

71

அடைந்த நாஞ புகைத்தேரில் அகமத் நகர்க்குச் செலப்பாசங்
கடந்த அவர்பால் விடை கேட்டான்கனிந்தகருணையுடனுணவு
திடந்தனுடனுண்டேகு கெனத்தெரித்தார் உடன்பட்டிருந்தார் பூ
மடந்தையுறைமார்போன் பஜனை மறையோன் விரைந்து

[புகைச்சகடம்

(போ-ரை.) அங்குச் சென்ற நாநு புகைவண்டியில் அகமத் நகர்க்குச் செல்வதற்காகப் பாசங்களை வென்ற சாயிபால் விடைகேட்டான். அதற்குப் பாபா முதிர்ந்தகருணையுடன் நாநுவைப்பார்த்து உணவு தயாராயுள்ளது, என்னுடனிருந்து சாப்பிட்டுப்போ என்று தெரிவித்தார். சரியென்று தங்கினர். திருமகளுறையும் மார்பையுடைய திருமால் பஜனை செய்யும் வேதியனே வேகமாகப்புகைவண்டி

72

செல்லும் நேரம் ஆயதென்று சென்றான் நாநு செல்லுமுனம்
வல்லை யவன்சென்றும்புகைத்தேர் வாராதன்று விளம்பனமாய்க்
கல்லை யனைய புயநாநு காலந்தாழ்த்தாங் கடைந்த பினே
மல்லல் அகமத் நகர் செல்புகை வண்டி வந்ததுவியப்பே.

(போ-ரை.) போகுங்காலம் ஆகிவிட்டதென்று சொல்லிச் சென்றனன். நாநு புறப்படுதற்கு முன்பே அவன் புகைவண்டி நிலயம் விரைந்து போயும் அன்று புகைவண்டி வரவில்லை. கல்லையொத்ததோளையுடைய நாநு மெதுவாகக் காலங்கழித்துப் போனபின்னரே வளப்பமிக்க அகமத் நகருக்குப்புறப்படும் புகைவண்டி வந்தது வியப்பானது.

73

உண்டிபெறுமல் யான்விரைந்திங் குற்றும்புகைத் தேருறக்காணேன்
உண்டு பசிதீர்ந் திவண் விரையாதுற்றான் நாநு இவன்வரவும்
பண்டி வந்ததெனமறையோன் பாபாமகிமை யிதுவெனவுட்
கொண்டு தவத்தர் மொழிகடத்தல் கூடாதென்கை குறித்தறிந்தான்

(போ-ரை) நான் சாப்பிடாமலே வேகமாக இவ்விடம் வந்தும் புகைவண்டி வராமற் போயிற்று, நாநுவோ நன்கு உண வருந்திப் பசியாறி வேகப்படாது இவ்விடம் வந்து சேர்ந்தனர். சேர்ந்தபின்னரே வண்டியும் வந்தடைந்தது என்று வேதியன், இதுவும் பாபாவின் மகிமையே, தவப்பெரியார் சொற்களைப் பேணுது நடப்பதுகூடாது என்று குறிப்பால் அறிந்தனன்.

74

பள்ள நீர்க்கடல் சூழும் இப் பார்மிசை
உள்ளம் வாக்கொ டுடற் பரி சுத்தராய்
உள்ள தொண்டர்கள் உள்ளுவ யாவையும்
வள்ளி யோரின் வழங்கிடுஞ் சாயியின்.

(போ-ரை) ஆழமான நீரையுடையகடலாற் சூழப்பட்ட இந்தப்பூமி யில் மனம்மொழி மெய்களில் தூயவரான அடியவர்கள் நினைப்பவற்றை யெல்லாம் பெருங் கொடையாளர் போற்கொடுக்கும் சாயிபாபாவின்.

75. அன்பை யெங்ஙன் அறைகுவன் எற்கெவண்
துன்பம் வந்து தொடரினும் ஆங்கெலாம்
முன்பு நின்று முறைபிற ழாவகை
இன்பு நல்கும் இவர் தமக் கேழையேன்

(போ-ரை) அன்பை எவ்விதம் எடுத்துரைப்பேன். எனக்குத் துன்பம் எவ்விடத்தில் வந்து சேர்ந்தாலும் அவ்விடத்தில் எல்லாம் முன் னர் வந்து முறை பிறழாதபடி இன்பத்தைக் கொடுக்கும் இவர்க்கு எளி யேன்

76. செய்வ தொன்றும் அறிகிலன் சீரடி
ஐய ராமிவர் அம்புவி மீதறம்
மெய்யின் ஓங்கிட வீழ அறங் கடை
உய்ய வையமுங் குற்றவர் என்பனே.

(போ-ரை) இன்னது செய்யத் தக்கது என்பதை உணராதவனாக இருக்கின்றேன், சீரடியில் விளங்குந் தலைவராகிய இவர் அழகிய பூமி யில் தருமம் உண்மையாக ஓங்கவும், பாவம் கெடவும், வையகத்தோர் நன்கு வாழவும் தோன்றியவர் என்று சொல்வேன்.

77. என்று ளத்தினில் எண்ணி யிருகரஞ்
சென்று சென்னியிற் சேர்ந்து குவிவுற
அன்று நானா அவர்திருச் சேவடி
நின்றி றைஞ்சினன் நீள்பதி நோக்கியே.

(போ-ரை) என்று தம்மனத்தில் நினைத்து, இரண்டு கைகளையும் தலைமீது குவித்துச் சேர்த்துச் சாயி பாபாவின் திருவடிகளிரண்டையும் அப்பொழுது நானா தாம் இருக்கும் இடமிருந்தே திக்கு நோக்கிப் பணி ந்து வணங்கினர்.

நானாசாகேப் கோபர்காம் செல்ல, பாபாவிடம் விடைகேட்டல்

78. நானாசா கேபு மற்றோர் நாட்கோபர் காமென்னும்
நகர்க்குச் செல்வான்
தேனாடு பொழில்சூழ்ந்த சீரடி வாழ் பாபாவைத்
தெரிசித் தேத்தி

ஆனாத பத்தியுடன் விடைதருக எனப்பணிய
அவர் இன்றேகேல்
கானாரு மலர்மார்ப நாளைக்கே கெனப்பணித்தார்
கருணை கூர்ந்தே

(பொ-ரை) மற்றோர் நாள் நாஞசாகிப் கோபர்காம் என்னும், நகருக்குச் செல்லும் பொருட்டுத் தேனை விரும்புகின்ற வண்டுகள் சுற்றுகின்ற சோலை சூழ்ந்த சீரடியில் வாழ்ந்து வரும் பாபாவை வழிபட்டுத் துதித்து நீங்காத பக்தியுடன் விடைதருக என்று விண்ணப்பிக்க பாபா நாஞமீது கிருபை வைத்து வாசனையுடைய மலர்மாலையையணிந்த மார்பையுடையவனே நீ இன்று புறப்படவேண்டாம் நாளைப் புறப்படுவாய் என்று பணித்தார்.

79. சில்லாவின் கலெக்டர் தமைக் காணுகைக்குப் புறப்பட்ட
தினத்தில் அந்த
நல்லார் வா ராது மற்றை நாள்வருவம் என்று தந்தி
நவின்றாரென்று
சொல்லாரும் அவ்வூரார் சொலக்கேட்டான் பாபாவின்
சொல்லால் அன்று
செல்லாமல் இருந் தும் ஓர் நன்மைக் கென் தறநினைந்து
தெளிந்தான் அன்றே.

(பொ-ரை) ஜில்லாக் கலெக்டரைப் பார்ப்பதற்காக எந்த நாளில் நாஞ புறப்பட்டனரோ அந்தநாளில் அவர் வராமல் மறுநாள் வருவதாகத் தந்தி வந்ததென்னும் சொல் பொருந்திய அந்நகரத்தார் சொல்வதறிந்து அப்பொழுதே பாபாவின் சொற்படி அன்று புறப்படாமல் நின்றதும் ஒரு நன்மைக் கென்றே கருதித் தெளிந்தார்.

80. பின்னர் எய்தும் பெருஞ்செயல் யாவையும்
முன்னர் எனகு மொழிந்தெனைக் காக்கும் இவ்
அன்னைபோல்பவர்க் காற்றுவதென் கொல்யான்
பொன்னை நேர்பதம் போற்றுவ தன்றியே.

(பொ-ரை) பின்னர் ஏற்படும் பெருங்காரியங்கள் யாவற்றையும் என்னிடம் முன்னதாகவே தெரிவித்து என்னைக் காப்பாற்றுந் தாய் போன்ற பாபாவுக்கு யான் செய்யத்தக்கது யாது உளது? அவர் பொன்னடிகளைப் போற்றுதலே செய்யத்தகுந்தது என்றார்.

நாநு, லேலே சாத்திரியுடன் குதிரை வண்டியிற்சென்றது

81. என்றுளத் தெண்ணியாங்கே யிருந்திடும் போழ்தில் ஓர் நாள்
தன்றுணை பெற்ற லேலே சாத்திரிதனை யழைத்தங்
கன்றவனுடன் ஓர் மார்க்கத் தச்சுவச்சகடம் ஊர்ந்து
சென்றிடுங் காலே வேகத் திண்பரி வெருண்டு பாய்ந்து.

(போ-ரை) என்று மனதில் எண்ணி அங்கிருந்த நாட்களில் ஓர் நாள் தம் துணைபெற்ற லேலே சாத்திரியைக் கூப்பிட்டு அன்று அவருடன் குதிரை வண்டியேறி ஓர் வழியிற்செல்லும் பொழுது வேகமாகச் செல்லும் வலிய குதிரை வெருட்சியுற்றுத்தாவி;

82. பண்டியைக் கவிழ்த்தும் போது பம்பம்பம் என்று பாபா
விண்டுநா ஞவைச்சாக விடுவனோ வென்றன் னேனைச்
சண்டனூர் புகவிடாது தடுத்துயிர்தந்த திந்தத்
தொண்டராங் கடைந்த நாளிற் சொற்றனர் மருதியுள்ளார்

(போ-ரை.) வண்டியைக் கவிழ்த்தியபொழுது பாபா பம்பம்பம் என்று கூறி நாநுவைச் சாகவிடாமல் யமனுலகடையாதபடி தடுத்து உயிர்தந்த விஷயத்தை நாநு சீரடியூர் அடைந்ததும் அவர் மருதியிலுள்ள அன்பர்கள் தெரிவித்தார்கள்.

83. இவ்வகை தனக்குநேரும் இயம்பொணு இடையூறுன
கவ்வையைப் போக்கியாளுங் கருணையை ஓர்ந்து நாநு
செய்வகை யறியேன் ஏழை சீரடித் தெய்வமேயான்
உய்வகையுயிர்தந் தாண்டவுதவிக்கும் உதவியுண்டோ.

(போ-ரை) இவ்விதம், தமக்கு ஏற்படும் சொல்ல முடியாத துன்பமாகிய பழியைப் போக்கியாண்ட திருவருளைச் சிந்தித்து, செய்வகை இன்னதென்று தெரியேன் எளியேன். நான் உய்யும்படி யாட்கொண்ட பெரியார்க்குச் செய்யுங்கைம்மாறும் உளதோ ?

84. நாயினுங்கடையேனுக்கு நாள்தொறும் நலனே செய்யுந்
தாயினும் இனியீர் நும்பொற்சரணன்றிச் சரண்வேறில்லேன்
சேயினும் எனையாட்கொண்டு தெருமரலொழிக்குந் தேவே
வீயினும் நுந்தாட்பற்று விட்டிடேன்விட்டி டேனே.

(போ-ரை) நாயினுங் கீழ்ப்பட்டவனுகிய எனக்கு ஒவ்வொரு நாளும் நன்மையே செய்யுந் தாயைப் பார்க்கிலும் இனிமையானவரே ! மிகுந்த தூரத்திலிருப்பினும் என்னை அடிமைகொண்டு என் மயக்கத்தைப் போக்குந் தெய்வமே! இறப்பினும் உம் அடியின்பற்றை விட்டொழிய மாட்டேன்.

## மைனுதாயிக்குக் கருப்பவேதனையை நீக்கிச் சுகப்பிரசவம் அருளியது

85. என்ன வுரைத்தின் புறு நானு எழிற்சாம் நேர்மாம்
லே தாராய்
மன்னர்மதிக்க வாழ்ந்திடுநாள் மைனு தாயி
யெனுந்தனது
பின்னையனைய புதல்விமுதற் பிள்ளைப் பேறு
பெறும் அமையந்
தன்னிற்கருப்பம் பிறழ்ந்ததனுல் தவித்தாள் உள்ளந்
தளர்வுற்றே.

(போ-ரை) என்பதாகக் கூறி மகிழ்வுறும் நானு அழகிய சாம் நேர் மாம் லேதாராய் மன்னர் மதிக்க வாழ்ந்து வருங்காலத்தில் மைனுதாயி என்னும் இலக்குமியைப் போன்ற தம்மகள் தலைக்குழந்தை பெறுங்காலம் கருப்பம் மாறுபட்டிருந்ததனுல் மனந்தளர்ந்து மிகத் தவிக்கலானுள்.

86. மகளடையுந் துயர்கண்டு பொருத நானு
மனம் புழுங்கி அத்துயரை மாற்ற எண்ணிப்
பகர்வுறு மந் திரபூர்வ மாக வோமம்
பலபுரிந்தும் நிவிர்த்தியொன்றும் பாரானுகி
மிகவருந்துஞ் செயலதனை யுணர்ந்து பாபா
விரைந்துசீ ரடிராம கிரென்றும் பேர்ப்
புகழுறு கோ சாவியினை யழைத்தோர் செய்தி
புகலுவார் அருள் சுரந்தப் போழ்து மாதோ !

(போ-ரை) மகள் அடைகின்ற துன்பத்தைப் பார்த்துப் பொறுக்க முடியாத நானு மனம்வெதும்பி அத்துன்பத்தை விலக்கக் கருதிச் சொல்லப்பெறும் மந்திர மூலமாக ஓமங்கள் பல செய்தும், நிவிர்த்தி யொன்றுங் காணுமல் மிகவருந்துஞ் செயலதனை யுணர்ந்து சீரடி ராம்கிர் என்னும் பேரையுடைய புகழ்வாய்ந்த கோசாவியினை அழைத்து மிக்க அருளுடன் அவரிடம் பாபா ஒரு செய்தி சொல்லுவார்.

87. பத்திமிகு பாபுகிர் சாம்நேர் சென்று
பாபா இவ் வுதிகொடுத்தாரென்று பண்பாய்ப்
புத்திமிகு நானுவினிடம் ஈகென்று
புகன்றி ரண்டு ரூபாவும் பொருந்த நல்கி
யித்தினமே செல்கென்ருர் அதுகேட் டன்னுன்
இது ஜல்காம் புகைவண்டியினுக்கே போதா
தத்த இனும் முக்காதம் பண்டி யேறி
யடையும்விதம் எவ்வாறென் றறைந்திட்டானே.

(போ-ரை) அன்புமிக்க பாபுகீர்! சாம் நேர்போய், பாபா இந்த உதிகொடுத்தாரென்று பண்புடன் அறிவுடைய நானுவிடம் கொடுப்பா யாக என்று சொல்லி இரண்டு ரூபாயும் சேரக் கொடுத்து இக்கணமே அங்குச் செல்க என்ருர் அதைக்கேட்ட பாபுகீர் ஐய! இந்தப் பணம் ஜல்காம் புகைவண்டிக் கட்டனத்துக்கே காணுது. அதன்மேல் மூன்று காததூரம் வண்டியிலேறி அவ்வூர் அடைவது எவ்விதம் என்று கேட்டான்.

88. அம்மொழிகேட்டருள் பாபா பாபுகீர் நீ
அஞ்சாமற் செல்க வுனக் காங்கு வேண்டும்
செம்மையுறு சவுகரியம் எல்லாம் நின்முன்
சித்திக்கு மென்றுரைத்தார் தெளியானுகி
விம்முமனத்துடன் ஜல்காம் புகையின் வண்டி
விட்டிறங்கும் போதிரவு மணி யிரண்டாம்
இம்மருண்ட இருளிடையிற் ஜாம்நேர் செல்வ
தெங்ஙனம் என் கையிலுள திரண்டணுவே.

(போ-ரை) அச்சொல்லைக் கேட்ட அருட்பாபா பாபுகீரை நோக்கி நீ பயப்படாமல் போ அங்கு உனக்குவேண்டிய சௌகர்யங்களெல்லாம் கிட்டும் என்றுகூறியும், தெளியாதவனுகி ஏங்கிய மனத்துடன் ஜல்காம் புகைவண்டிவிட்டு இறங்கும்பொழுது இரவு மணி இரண்டு. இந்த மருண்டஇருளில் ஜாம்நேர் போவது எவ்விதம்? என்கையில் இருப்பது இரண்டணுதானே.

89. என்புரிவேன் எனத்திகைத்து நின்ருன் அப்போ
தெதிரொருவன் சீரடியூர்ப் பாபுகீரென்
றன்பொடு சொல் கோசாவி யாரென் ருங்கே
அறைகூவ யானே நீ அழைப்போன் என்ருன்
இன்புடனே நானு நற் பரியின் வண்டி
யீங்கனுப்புவித்தார் நீ யேறுகென்று
துன்பகற்றிச் செல்வழியில் உணவுந் தந்து
தோமறு நானு அகம் ஈதென்றுகாட்டி

போ-ரை) என்னசெய்வேன் என்று தத்தளித்து நிற்கும்பொழுது எதிரில ஒருவன் வந்து, சீரடியூர்ப் பாபுகீர் என்று அழைக்கப் படும் கோஷாயி யார் என்பதாக அன்புடன் வாய்விட்டுக்கேட்க, தங்களால் அழைக்கப்படும் பெயருடையேன் யானே என்ருன். மகிழ்ச்சியுற; நானு அனுப்பி யிருக்கும் குதிரை வண்டிஇது, இதில் ஏறுக என்று சொல்லித் துன்பத்தைப் போக்கி ஏற்றிச் செல்லும் வழியில் உணவுங் கொடுத்துப் பின் குற்றமற்ற நானு வீடு இது என்று காட்டி,

90. பண்டியுடன் அவன் மறைந்தான் பின் கோசாயி
பார்புகழும் நாஞவின் பக்கஞ் சார்ந்து
கண்டு பாபா அளித்தார் உதியென்றீந்தான்
கரமிரண்டும் ஏந்திமிகு களிப்போ டேற்று
மண்டு பிர சவவலியால் வருந்துகின்ற
மகட்களித்தான் அம்மகளும் வாங்கிப் பூசிப்
பண்டடைந்த துயர்நீங்கி மகவை யீன்ருள்
பாபுகீர் ஓர் வசனம் பகர்வதாஞன்.

(போ-ரை) உடனே வண்டியுடன் அவன் மறைந்து போஞன். பின் கோஷாயி பூவுலகோர் போற்றும் நாஞவின் பக்கம் சேர்ந்து பார்த்து, பாபா இந்த உதியைக் கொடுக்கச் சொன்ஞர் என்று கொடுத்தான். இரண்டு கைகளிஞலும் மகிழ்ச்சியுடன் பெற்று நெருங்கிய பிரசவ வலியால் வருந்துகின்ற மகளிடம் கொடுத்தார். அப்பெண்ணும் அதனை வாங்கிப் பூசி முன்னரடைந்த வருத்தம் நீங்கி மகவையும் பெற்ருள். பாபுகீர் ஓர் வாசகம் சொல்லலாஞன்.

91. ஐயீர்நீர் அனுப்புவித்த பரியின் பண்டி
யாலும் உண வாலுமீங் கடைந்தேன் இன்றேல்
மையாரும் இருளதனில் வழிகாணுது
மயங்குவேன் என்ருன்அவ் வார்த்தை கேட்டுச்
செய்யாரும் ஜாம்நேர்வாழ் நாஞ வுள்ளந்
திகைப்படைந்து சீரடியி லிருந்தி யாரும்
மெய்யாக இவண் வருதல் அறியேன் பண்டி
விடுத்திலேன் ஈதென்ன விந்தை யென்றே.

(போ-ரை) ஐயா! தாங்கள் அனுப்பிவைத்த குதிரைவண்டியின் சகாயத்தாலும் உணவாலும் இவ்விடம் அடைந்தனன், இல்லாது போஞல் இக்காரிருளில் வழி தெரியாமல் மயங்குவேன் என்ருன். அதைக் கேட்டதும் வயல்கள்நிரம்பிய ஜாம்நேரில் வாழும் நாஞ மனம் திகைத்து இவ்விடம் சீரடியிலிருந்து எவரும் உண்மையாக வருவதாக அறியேன். வண்டியொன்றும் நான் அனுப்பிவைக்கவும் இல்லை, இது என்ன விந்தை என்று,

92. அகத்திலெணி யிவையனைத்தும் பாபா வின்றன்
அருட்டிறனென் ருேதினனங் கசுவ மாகிச்
சகத்துறுபண் டியுமதனை ஓட்டு வோனுந்
தாமாகிச் சென்றவர் நம் சாயி பேயிம்

மகத்துவத்தை யென்சொலுவேன் அடியர் துன்பை
வழுத்தாம லேயறிந்து மாதா வேபோன்
மிகத்தவிர்க்கும் இவர்க்கு ஞற்றும் கைம்மா றிந்த
மேதினியி லுள்ளனவோ விளம்புங் காலே.

(போ-ரை) மனத்தில் நினைத்து, இவை யாவும் அந்தப்;பாபாவின் அருட்செயல் என்றார். குதிரையும் உலகத்திற் பொருந்திய வண்டியும் அவற்றை ஓட்டுவோருமாகப் பொருந்தியவர் நம் சாயியே. இம்மகிமையை யாதென்பேன். அவர் அடியவர் துயரத்தை அறிவிக்காமலிருக்கும் பொழுதே அறிந்து தாய்போல் அதனை யொழிக்கும் சாயிபாபாவுக்குயான் செய்யும் கைம்மாறு யாதுளது என்று சொல்லும்பொழுது.

93. அன்று பாபா அறைந்தசொற் போலவே
இன்று சௌகரியங்கள் அனைத்தும் எற்
கொன்றி நின்றன என்றுளத் தோர்ந்தனன்
நன்றி கூர்பாபு கீரெனும் நல்லனே.

(போ-ரை) அப்பொழுது பாபா சொல்லிய சொற்படியே எல்லா விதமான சௌகரியங்களும் இப்பொழுது எனக்கு அமைந்து நின்றன என்று நன்மை மிக்க பாபுகீரும் தன் உள்ளத்துச் சிந்தித்தனன்.

94. நலமிகும் ராமகீ ரெனும் இந்நாமனைக்
குலமிகு பாபுகீ ரென்னக் கோதுசெய்
மலமிக வொழிக்குமெய்ம் மாத வப்பெரும்
புலமிகு சாயிபொற் புறஅ ழைப்பரே.

(போ-ரை) குற்றஞ்செய்யும் மலத்தை மிகவும் போக்கும் மெய்ம் மாதவத்தையுடைய பெரும் புலமை மிகுந்த சாயி நன்மை மிக்க ராமகீர் என்னும் பெயருடையவனாகிய இவனைக் குலஞ்சிறந்த பாபுகீர் என்று அழகுற அழைப்பர்.

95.

மலரவன் முன்னாள் மாயனை யிகழ்ந்து மற்றவன் மேய்த்த ஆன் கன்றை
நலனுள ஆயர் சிறுவரைக் கவர்ந்து நாள்பல கரந்து வைத்தது கண்
டலகில் ஆன் கன்றாய் ஆயர்தம் மகாராய் ஆழிசூழ் புவியதி சயிப்ப
அலரவன் சமழ்ப்ப வாற்றிய கண்ணன் ஆவரிச் சாயியேயன்றோ.

(போ-ரை) முன்னாள் பிரமன் திருமாலை இகழ்ந்து அவன் மேய்த்த ஆன் கன்றையும் நன்மைமிக்க இடைச் சிறுவர்களையுங் கவர்ந்து

பல நாள் மறைத்துவைத்திருந்ததை அறிந்து கடல் சூழ்ந்த பூமியிலுள்ளோர் அதிசயிக்கவும் பிரமன் நாணமடையவும் ஆன்கன்றுயும் ஆயர் மகாராயும் அற்புதம் விளைத்த கண்ணனே ஆவர் இச்சாயி.

### சாயி நானுவுக்குப் பாரமார்த்த உபதேசம் அருளியது

96.

மின்னுடன் ஈங்கு வந்த நீளரி பஜனைக்காரன்
பின்னுனை விட்டு நீங்கிப் பேதைமை யதனுற் சென்றான்
அன்னவன் போன்றோர் கேண்மை யறவொழித்தல்லற்றுன்பம்
துன்னினும் நீங்காதாரைத் துணையென க்கோடல் வேண்டும்.

(பொ-ரை) உன்னுடன் இங்கே வந்த நெடிய திருமால் பஜனை புரிவோன் பின்பு உன்னை இவ்விடம் விட்டு அறிவின்றிச் சென்றனன். அத்தகையர் நட்பினை முற்றும் நீக்கிப் பெருந்துன்பம் நேர்ந்தாலும் விலகாத நண்பரையே துணையாகக் கொள்ளுதல் வேண்டும்.

97. காமமே முதல ஆறுங் கடிதரு குணங்கள் சாரா
நேமமோ டிருந்து மேலோர் நிகழ்த்திய விதி விலக்கைச்
சேமவைப் பென்னக் காத்துச் சித்த மாசறுத்து வாழ்தல்
பூமிசை மனுடயாக்கை பொருந்தின ரெவர்க்கும் நன்றாம்.

(பொ-ரை) கடியப் படுவனவாகிய காமம் குரோதம் முதலிய ஆறு உட்பகைகளையும் ஒழித்த மேலோர் நியமமோடிருந்து நிகழ்த்திய விதி விலக்கைச் சேமநிதி யாகக்காத்து மனவழுக்கறுத்து வாழ்வது பூமியில் மனிதப் பிறவியுற்ற யாவர்க்கும் நல்லதாம்.

98. ஈதெலாம் பிரம சைதன் னியதரிசனங் காண்டற் கிங்
கேது வாமெனப்பல் லாற்றான் எடுத்தெடுத் தியம்பி நானு
மேதக வெய்து மாறு மெய்ப் பொரு ளுணர்த்திப் பாபா
ஆதரம் புகன்றார் சின்னாள் அகன்றபின் ஆங் கோர் நாளில்

(பொ-ரை) இவை யாவும் கடவுள் தரிசனத்தைப் பெறுவதற்கு நிமித்தமாம் என்று பலபல வகையால் உபதேசித்து நானு மேன்மையடையும்படி மெய்ப்பொருளுணர்த்தி அன்புரைவழங்கினார். சிலநாட் கழித்த பின் ஓர் நாளில்

99. மண்டல மதிக்கும் பாபா மலரடி வணங்க வந்த
கொண்டலை யலைக்குங் கூந்தற் கொம்பனார் இஸ்லா மார்க்கத்
தொண்டொடி யிருவர் தம்மில் ஒருத்தியின் வனப்பெலாங்கண்
கண்டுகா தலித்து நானு கலங்கினன் கவன்று நெஞ்சம்.

(பொ-ரை) மண்டலத்தவர் மதிக்கும் பாபாவின் மலரடிகளை வணங்க வந்த மேகத்தைக் கருமையால் புறங் கொடுக்கச்செய்த கூந்தலை யுடைய பூங்கொம்பை யொத்த இஸ்லாம் மார்க்கத்துப் பெண்களிருவரில் ஒருத்தியின் அழகையெல்லாம் கண்ணுறக் கண்டு பருகி மனங்கலங்கி நின் றனர் நானு.

100. குலனுயர் கல்வி சீலங் கோதிலா வாய்மை தூய்மை
நலனிவை யனைத்தினேடு நற்குடிப் பிறப்பும் பெற்றுப்
புலனெடுக் கியல்பு வாய்ந்தோன் புந்தி நைந்திடுதல் கண்டு
வலனுறு சாயி அன்னுன் மணித்தொடை புடைத்திட்டாரே.

(பொ-ரை) உயர்ந்த குலம், கல்வி மேன்மை, தூயவாய்மை சுத்தம், மற்றுமுள்ள நலங்களோடும் நற்குடிப் பிறப்பும் பெற்று ஐம்புலன்களையும் ஒடுக்கியாளுந்திறமை வாய்ந்த நானு இவ்விதம் மனம் வருந்துவதைக் கண்டுதவவலிமை பொருந்திய சாயி நானுவின் தொடையைத் தட்டினுர்.

101·

உன்னையான் அடித்தற்கேது வுணர்தியோ உரைத்தியென்ன
என்னை நுஞ் சந்நிதானத் திருந்துமிவ் விழிந்த செய்கை
தன்னிலென் மனஞ்சென்றிட்ட தன்மை சற் குருவே நும்பால்
என்னதான் மறைக்க என்னுல் இயலுமென்றிசைத்தான் அன்றே.

(பொ-ரை) உன்னை நான் அடித்ததற்குக் காரணம் அறிவையோ சொல் என்ற வளவில், தங்கள் சந்நிதானத்திலே இவ்விதம் இழிந்த செய்கையில் என் மனம் சென்ற தன்மை என்ன ? சற்குருவே ! எந்தக் காரியத்தைத் தங்களிடம் மறைத்துவைக்க முடியும், என்ருர்.

102. வாசனை வயத்த வன்றே மானுட வடிவம் கண்டால்
ஆசுறு விடயம் தன்னில் அழுத்திடா விடுமோ பின்னைப்
பூசுரர் மரபோய் காணும் பொருளெலாங் கடவுள் வைகும்
தேசுறு கோவிலென்று சிந்தையிற்றியானிப்பாயே.

(பொ-ரை) இந்த மானுடவடிவம் பூர்வ வாசனைக்குத் தகுந்தபடியே அமைவது என்றறிக. ஆகையால் ; பார்த்தால் குற்றம் பொருந்திய இச் சையில் உன்னை அழுத்தாமற் போகாது. வேதியர் குலத் தவ ! காணப் படும் பொருள்கள் எல்லாம் இறைவன் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில் என்று மனத்தில் தியானிப்பாயாக.

### நானு பன்னு மாயியைத் தரிசித்தற்குப் பாபாவிடம் விடை பெறுதல்

103. புவிபுகழ் அஹமத் ஜில்லாப் போதேகாம் என்னும் ஊரில்
நவில் மகமதியளாகி நண்ணிவாழ் பன்னு மாயி
அவியுணும் அமரர் நாட்டின் அணங்கனுரழகின் மிக்க
சவியுளாள் இருபா னென்னச் சாற்றிடும் வயது சார்ந்தாள்.

(போ-ரை) பூமியிலுள்ளோர் புகழும் அஹமத் ஜில்லாவைச் சேர்ந்த போதேகாம் என்னும் ஊரில் மகமதியப் பெண்ணுகப் பொருந்தி வாழ் கின்ற பன்னுமாயி என்பாள் அவிர்ப்பாகம் உண்ணும் தேவலோகப் பெண்ணினும் அழகுமிக்க ஒளியுற்ற இருபது ஆட்டைப் பிராயத்தினள்.

104. உண்டியுந் துயிலும் இன்றி உடுக்கையும் நாணும் இன்றி
மண்டுதீக் கானிற் கள்ளி வளர்புதர் களிற் சரிப்பாள்
கண்டவர் பித்தென்றெள்ளக் கன்னியாம் பருவந்தன்னில்
விண்டிட வொண்ணுத்தூய மெய்த்தவ விரதியானுள்.

(போ-ரை) ஊண் உறக்க மில்லாமலும், நாணமில்லாமலும் நெருங் கிய தீப்பறக்கும் காட்டில் வளர்ந்துள்ள முள்ளடர்ந்த கள்ளித்தூறின் மறை விற் சஞ்சரிப்பவள். பார்த்தவர்கள் பைத்தியகாரி என்றிகழும் படி கன் னிப்பருவத்திலேயே சொல்லமுடியாத தூய மெய்த்தவ விரதியாக விளங்குகிறுள்.

105. இரவினில் மட்டுந் தன்னை யீன்றதாய் வசிக்கும் இல்லில்
கரவிலா மனத்தாள் வைகிக் கங்குல்போ யகன்ற பின்னர்
விரைவினிற் கானஞ் செல்வாள் மிக்குற நெருங்கித் தன்பால்
வருபவர்க் கெதிருருமல் மறைந்து முள்ளுறு கள்ளிக்குள்

(போ-ரை) இராத்திரியில் மட்டுந் தன்னைப்பெற்ற தாய் வசிக்கும் வீட்டிற் கள்ள மில்லாத மனதுடையவள் தங்கியிருந்து விடிந்ததும் விரைவிற் காட்டிற்குப்போய் விடுவாள். தன்னை நெருங்கி வருபவர் காணுதபடி முட்கள் பொருந்திய கள்ளிக்குள் மறைந்து,

106. சென்றுறைந்திடுவள் மெய்யிற் சேர்ந்த அக்கள்ளி முட்கள்
ஒன்றையுங் கரத்தால் நீக்காள் ஒருப்படாள் பிறரும் நீக்க
என்றும் ஓர் பொருட்டாகத்தன் இயலுடம் பினையெண்ணுதா
ளின்றறி சனத்தை யுள்ளத் தெண்ணினன் நானு வென்பான்

(போ-ரை) போய்த் தங்குவாள், தன் உடம்பிற்றைத்த கள்ளிமுட் கள் எவற்றையும் தன் கையால் அகற்றமாட்டாள், பிறர் எடுக்கவும் இடங் கொடாள், தன் அழகிய உடம்பை ஒரு பொருளாக என்றுங்கருதாள். இத்தகையவளின் இனிய தரிசனத்தை அடையவேண்டு மென்று நானு தம் மனத்துட் கருதலானுர்.

107. பன்னு மாயியைப் பார்த்திட வேண்டுமென்
றென்னுளத்தினில் எண்ணினன் எண்ணி யாங்
கன்ன மெய்த்தவ அன்னை தரிசனந்
தன்னை யான்பெறத் தண்ணருள் செய்தவண்

(பொ-ரை) பன்னுமாயியைப் பார்க்கவேண்டுமென்று என் உள் ளத்திற் கருதினேன். நான் கருதியபடியே அந்த உண்மைத்தவத் தாயைத் தரிசிக்கும் வண்ணம் எனக்குக் குளிர்ந்த அருள் புரிந்து அவ்விடம்.

108. ஏகும் வண்ணம் இனிய விடையினை
ஓகை கொண்டிங் குடன்றரு கென்ன அம்
மாய்கை வென்றமெய்ம் மாதவச் சாயியைப்
பாகை வென்ற சொற் பார்ப்பனன் வேண்டினன்.

(பொ-ரை) போய் வரும்படியான நல்ல விடையை மகிழ்ச்சியோடு உடன் தந்தருள்க என்ன, மாயையை வென்ற அந்த மெய்ம்மாதவச் சாயியிடம் சர்க்கரைப் பாகை வென்ற சொல்லையுடைய பார்ப்பனனாகிய நானு வேண்டினர்.

109.

வேண்டும் நானுவை நோக்கி வேதிய நினக்கம் மாதைக்
காண்டகு விருப்பேன் வேண்டா கன்னிகை யென்றுசொற்றும்
தேண்டியெவ் விதமுங்காணத் திருவருள் புரிதல் வேண்டும்
பூண்ட என் விரதம் பொய்த்துப் போகுதல் இலாதவாறே.

(பொ-ரை) இங்ஙனம் வேண்டிய நானுவைப் பார்த்து, வேதிய! உனக்கு அப்பெண்ணைப் பார்க்கவேண்டும் என்ற ஆசை வேண்டாம். அவள் ஓர் கன்னி என்று சொல்லியும் நான் மேற்கொண்ட விரதம் பொய்த்துப் போகாதபடி எவ்விதமேனும் நான் தேடி அவளைக்காணும் படி திருவருள் புரியவேண்டும்.

110. ஐய என்றடி பணிந்தனன் அவனுளக் குறிப்பும்
துய்ய உள்ளமும் உணர்ந்த பாபா அருள் சுரந்து
செய்ய மாதவத் தெரிவையின் தெரிசனம் நினக்கு
வைய மீதினில் வாய்க்குமே குகெனவாய் மலர்ந்தார்.

(பொ-ரை) ஐயனே என்று அவர் திருவடியை வணங்கினர். நானுவின் உள்ளக்குறிப்பையும் தூய மனத்தையும் அறிந்த பாபா இரக்க முற்று, இப்பூமியில் சிறந்த மாதவச் சீராட்டியின் தரிசனம் உனக்குக் கிடைக்கும் நீ செல்க என்று திருவாய் மலர்ந்தருளினர்.

111. மெய்த்தவ ராசி விடையது பெற்றவ்
வித்தகி சேவை விழைந்துள நாஞ
பத்தியொ டெண்ணெய் பவித்திர மேவும்
உத்தம வத்திரம் ஓங்கிய கச்சும்

(போ-ரை) உண்மைத் தவசியின் ஆசி விடைபெற்று அந்த வித்தகி தரிசனம் விரும்பிய நாஞ அன்புடன் எண்ணெயும் பரிசுத்தம் வாய்ந்த உத்தமவத்திரமும் உயர்வான இரவிக்கையும்,

112. செங்கன கத்தணி செய்திடு பொட்டும்
மங்கல நாணும் மலர்ந்தகை தாங்கி
யங்கவன் வந்தவ் வருந்தவ வாழ்க்கை
மங்கையை யெங்கென மாநக ரார்பால்

(போ-ரை) தனிச் செம் பொன்னுற் செய்த அழகிய பொட்டும், மங்கலக்கயிறும் ஆகிய இவற்றை விரிந்த கையிற் சுமந்து அவள் இருக்கு மிடம் வந்து அருந்தவம் மேற்கொண்ட மங்கை எங்கே என்று அந்த நகரா ரிடத்தில்,

113. கேட்டனன் அன்னவர் கேடிலியான
பேட்டன மன்ன பிரமை கொள் பித்து
நாட்டமொ டேகி நடந்து திரியும்
காட்டிடை யென்று கழறினரன்றே.

(போ-ரை) நாஞ கேட்டனர். அந்நகரத்தவர் கேடற்ற பெண் ணன்னம்போன்ற பித்தாகிய அவள் காட்டிடைச் சென்று உலாவித்திரி யும் என்றனர்.

114. மங்கை வயது மருவும்நிர் வாண
நங்கையை வாலிப நல்வய துற்ற
இங்கிவன் தேடுதல் எங்ஙன மென்று
சங்கை யுளத்தொடு சாற்றினர் சில்லோர்.

(போ-ரை) மங்கைப் பருவமடைந்து நிர்வாணமாகத் திரியும் பெண்ணை இந்த நல்ல வாலிப வயதுள்ளவர் தேடுவது எப்படியிருக்கிற தென்று சந்தேக மனத்துடன் கூறினர் சிலர்.

115. இன்னவை யாவையும் எண்ணி யுளத்தில்
முன்னிய யாவும் முடித்தருள் சாயி
யின்னுயர் சேவடி யேத்தி யிறைஞ்சி
முன்னறி கண்களை மூடினன் நின்றான்

(போ-ரை) இப்படிப்பட்ட பல வார்த்தைகளையுங்கருதி மனத்தில் எண்ணியயாவற்றையும் நிறைவேற்றிவைக்கும் சாயிபாபாவின் திருவடிகளைப் போற்றிவணங்கி, புறப் பொருள்களைப் பாராமல் கண்களை மூடித் தியானத்தில் அமர்ந்தார்.

116. நின்றவன் விழித்தான் கண்முன் னின்றனள் பன்னு மாயி
அன்றவள் பாதம் போற்றி யடியின்முட் களையப் பக்கல்
சென்றனன் அணுகு முன்னர்ச் சேய்மையிலோடிக் கானில்
துன்றிய புதர்க்குட் புக்குத் தோன்றிடா மறைந்தா ளன்றே.

(போ-ரை) தியானத்திலிருந்து விழித்தார். விழித்த அவர் முன் பன்னுமாயி தோன்றி நின்றனள். நின்ற அவள் திருவடிகளைத் துதித்துக் காலில் தைத்துள்ள முட்களை எடுக்கும் பொருட்டுப் பக்கத்தில் நெருங்கினர். நெருங்குமுன் தூரத்தில் ஓடிக் காட்டில் நெருங்கிய புதர்க்குள் யாருங்காணாதபடி மறைந்தாள்.

117. கரந்தவள் வராமையாலே கவலைகூர் நானு வின்றன்
அரந்தைசேர் வதனம் நோக்கி யவனொடாங் கடைந்த நண்பன்
விரைந்தினி மீள்வோம் ஈண்டு மேதகக்கிடைத்த அன்னாள்
வரந்தரு தரிச னத்தின் மாட்சியே சாலும் என்றான்.

(போ-ரை) மறைந்தவள் வராததினாலே கவலைமிக்க நானுவின் துயர் பொருந்திய முகத்தைநோக்கி அவருடன் அங்குச் சென்றிருந்த நண்பன், இப்பொழுது மேன்மைபொருந்திய பன்னுமாயியின் சீரியதரிசனம் கிடைத்ததுவே போதுமானது, இனி நாம் திரும்பிவிடுவோம் என்றான்.

118. எண்ணிய முற்ற மீண்டும் இனிதவள் தரிச னத்தை
நண்ணிட நினைந்து நானு நற்றவர் தமைச்சிந்தித்தான்
புண்ணியப் பன்னு மாயி போந்தவன் கொணர்தை லத்தை
வண்ணமார் சிரத்திற் றேய்த்து மங்கள நானம் ஆடி

(போ-ரை) நினைத்த வண்ணம் முற்றுப்பெறத்திரும்பவும் மாயியின் தரிசனத்தை யடைய எண்ணிச் சாயிபாபாவை நினைத்தனர் நானு. புண்ணியம் வாய்ந்த பன்னுமாயி அவ்விடம் வந்து நானு கொண்டு வந்திருந்த தைலத்தை அழகிய தலையில் தேய்த்து மங்கள ஸ்நானஞ் செய்து.

119. பட்டுடை யான பொன்னம் பரத்தினை யுடுத்துச் சொர்ணப்
பொட்டும் நாணுங்கழுத்திற் பூண்டுகுங் குமப்பொட் டிட்டு
வட்டவான் மதியைமானும் மலர்முக மிலங்க நின்றாள்
மட்டவிழ் தாரான் கண்டு வணங்கினன் மாயி பாதம்.

(பொ-ரை) பட்டுப் பீதாம்பரத்தை யுடுத்துத் தங்கப் பொட்டை யும் மங்கல நாணையும் கழுத்திலணிந்து நெற்றியிற் குங்குமப் பொட் டிட்டு, வட்டமான விண்ணில் விளங்கும் சந்திரன் போன்ற தாமரை மலரை யொத்த முகந்துலங்க நின்றாள். வாசனை விரியும் மாலையணிந்த நாணு கண்டு மாயி திருவடியை வணங்கினர்.

120.

அக்கண மேதான் பூண்ட ஆடையை யவிழ்த்தெ றிந்துந்
திக்கெலாம் ஒளிர்பொன் ஞாணைச் செங்கையாற் களைந்தெறிந்தும்
மைக்குழற் பன்னு மாயி மறைந்தனள் விரைந்தங் கோடி
மிக்கஅவ் வூரார் ஆங்கு விளைந்தவையாவும் ஓர்ந்து.

(பொ-ரை) அந்தக்ஷணமே உடுத்த ஆடையைக்களைந்து எறிந்தும், அழகிய தங்கக் கயிற்றைச் செங்கையால் நீக்கித் திக்கெங்குஞ் சிதற வீசியும், கரிய கூந்தலுடைய பன்னுமாயி ஓடி மறைந்து விட்டாள். மிகுந்த அவ்வூரவர் விரைந்து அங்கு நிகழ்ந்தவற்றையெல்லாம் ஆராய்ந்து,

121.

எண்ணெயாம் முழுக்காம் பொட்டாம் இலங்கு பொன் உடையாம்
(எற்ற
பண்ணமை கலனும் என்றும் பார்த்திலாப் புதுமை யின்று
மண்ணினிற் கண்டோம் பன்னு மாயி யாம் பித்துக் கென்றவ்
வொண்ணுத லாள்பாற்சங்கை யுற்றன ரதனைக் கேட்ட.

(பொ-ரை) பன்னுமாயி என்ற பித்துக்கொள்ளிக்கு இன்று எண்ணெயாம், முழுக்காம், பொட்டாம், விளங்கும் பொன்னுடையாம், தக்க வேலைப்பாடமைந்த அணியாம், இப்பூமியினிடத்து இவையெல்லாம் நாம் இதுவரை கண்டிராத புதுமையே யாகும் என்று அந்த அழகிய நெற்றியையுடைய வளிடத்திற் சந்தேகப் பட்டனர்.

122.

மாயி யின் அன்னை ஓடி வந்து தன் மகளைத் தீய
வாயதுர் நடத்தைக் கன்னோன் அகப்படுத்தினனென்றஞ்சி
வாயினில் வந்தவாறு வசைமொழி மொழிந்தாள் நாணு
தாயினு மினியாய் பாபா தண்ணரு ளதனுற் பூசை

(பொ-ரை) மாயியின்தாய் ஓடிவந்து தன் மகளைத் தீமையான துர்நடத்தைக்கு அந்த நாணு ஆளாக்கி விட்டார் என்று பயந்து வாயில் வந்தபடி நிந்தை மொழிகள் பேசினள். நாணுவோ, தாயினுஞ் சிறந்த வளே! பாபாவின் இனிய கிருபையால் பூசை,

123.

புரிந்திடக் கொணர்ந்தே னென்று புகன்றனன் நம்பாளாகிப்
பரிந்தனள் ஆடை செம்பொற் பணியும் நின் பாலகிக்கே
பொருந்த அர்ப் பணஞ் செய்திட்டேன் போதுக எடுத்தென் றேத
உரந்தைதீருளத்தளாயவ் வுடைமைகொண்டு வந்துசென்றாள்,

(பொ-ரை) செய்யக் கொண்டு வந்தேன் என்றனர். நம்பாமல் வருந்தினுள். ஆடை, செம்பொன் ஆபரணம் யாவும் உன்மகட்கு என்றே நன்கு அர்ப்பணஞ் செய்து விட்டேன்; அவற்றை எடுத்துப்போவாய் என்று சொல்லத் தாயும் வருத்தமொழிந்த மனத்துடன் அப்பொருள்களை எடுத்துக் கொண்டு போயினள்.

124.

பின்னரோர் கோவில் சென்று பெரும்பசி தணித்தாங்குள்ள
மன்னுகர்ப் பக்கிர் கத்தில் வாயில்தாழிட்டு மாயி
தன்னையூர் செல்லு முன்னந் தரிசனை புரிவான் மீண்டும்
முன்னின னிருந்தான் சாயி முனிவரர் தாள்சிந் தித்தே.

(பொ-ரை) பின்னர், கோவிலொன் றனுட் போய் மிகுந்த பசியைப் போக்கிக்கொண்டு அக்கோவில் கருப்பக் கிருகத்தில் கதவைத் தாழிட்டுக் கொண்டு தன் ஊருக்குப் போகுமுன் திரும்பவும் மாயியைத் தரிசிக்க வேண்டு மென்று கருதிச் சாயி பாபாவின் திருவடியைத்தியானித்தார்.

125.

அந்த வேளையிற் றாழிட்ட அவ்வறை
வந்து தோன்றி மகிழ்ந்து தரிசனந்
தந்து மாயி தணந்து கரந்தனள்
ஐந்த வித்திடும் அற்புத ஆற்றலாள்.

(பொ-ரை) ஐம்புல ஆசையையும் வென்ற அற்புத ஆற்றலுடைய மாயி தாழிடப் பட்டிருந்த அறைக்குள் தோன்றி மகிழ்வுடன் தரிசனந் தந்து பிரிந்து மறைந்தனள்.

126.

பன்னு மாயியைத் தரிசித்த பார்ப்பன னாறு
துன்னு பத்தியாற் சாயி யின்றுணைப் பதந்துணைக்கொண்
டிந்நிலத்தினில் வாழும் நாளுலோபத்தை யிகந்து
தன்னிடத்தினில் வரும் இரவலர்க்கு நற்றானம்.

(போ-ரை) சொல்லப்பட்ட மாயியைத் தரிசித்த அந்தணராகிய நாஞு, சாயி பாபாவிடத்தில் நெருங்கிய அன்பால் அவர் திரு வடியிணை களைத் துணையாகக் கொண்டு இந்நில வுலகில் வாழ்ந்து வருங்காலத்தில் உலோப குணத்தினின்றும் நீங்கி, தன்னிடத்தில் வருகின்ற யாசகர் கட்கு நல்லதானம்,

127.

ஈதலே நலன் இருமைக்குஞ் சாதனம் இதுவென்
ருேது சாயியி னுயருபதேசம் பெற் றூர் சென்
றேத மின்றியே யிருந்தன னங்கொர் நாளிரக்கும்
மாதொருத்தி தன் மனையக வாயில் முன் வந்து

(போ-ரை) கொடுத்தலே இம்மைக்கும் மறுமைக்கும் நன்மையா வது என்று சொல்லிய சாயியின் நல்லுபதேசம் பெற்றுப் போய், குற்ற மில்லாது வாழ்ந்து வந்தனர்; ஒருநாள் பிச்சை யெடுக்கும் இயல்பினளா கிய பெண்ணொருத்தி அவர் வீட்டு வாயில் முன் வந்து,

128.

பொரியரிசி தருகவெனப் புகன்றனளங் கது கோடுத்தும்
பெருக இனுந்தருதி யெனப் பினுங் கொடுத்தும் அமையா து
விரகுடன ஈரிரண்டுபடி மேவுமிவிலுள அவற்றைக்
கரவகற்றி யளித்தி யெனக் கனன்றவளைக் கடு கடுத்து

(போ-ரை) போரியரிசி தருவாயாக என்று கேட்டனள். அதனைக் கொடுத்த பின் திரும்பவும் அதிகமாகக் கொடுப்பாயாக என்று கேட்கக் கேட்கக் கொடுத்தும் திருப்தி யடையாமல் வீட்டிலிருக்கும் நான்கு படி யையும் கொடுப்பாயாக என்று சாமர்த்தியமாய்க் கேட்க அவளை மிகக் கடுமையாகக் கோபித்து

129.

பெற்றது கொண்டேகுக நீயேகாயேற் சேவகனுற் பிடர் பிடித்து
மற்றுனைத் தள்ளிடப் புரிவேன் எனப்புகல் சொற் கேட்டவளும்
(வருந்திச் சென்ருள்
நற்ற வத்தர் துதி சாயிதம்முனர்ச் சின்னுட்கழித்து நாஞுசென்ருன்
சற்று முகங் கொடாதும் உரையாடாது மிருந்தனரத்த வத்தரன்றே.

(போ-ரை) கொடுத்ததைப் பெற்றுக் கொண்டு போய் விடு, இல் லாது போனுல், சேவகனைக் கொண்டு உன்னைப் பிடர் பிடித்துத் தள்ளச் செய்வேன் என்று பேசிய பேச்சைக் கேட்டு அவளும் மனம் வருத்தத் துடன் சென்று விட்டாள். நல்ல தவசிகள் யாவரும் புகழும் சாயி பாபா

சமுகம் காணு சில நாட்கழித்தபின் சென்றார். சாயியோ சிறிதும் முகங் கொடாதும் பேசாதும் இருந்தனர்.

130.

என்னிடம் பேசாதிருந்த தென் னென வென்
னுபதேசத் தினைக் கைவிட்ட
மின்னிடம் பே சுதற்கென்ன நியாயமென
அங்ஙனம் யான்நீவிர் ஈங்குச்
சொன்ன மொழி பிழைத்ததென்னை யெனவினவ
மின்னகத் தைத் துருவிப்போந்து
தன்னகத்துப் பசி தணிக்கப் பொரியரிசி
யாசித்த தன்மையாளை

(பொ ழி ப் பு ரை) என்னிடம் பேசாதிருக்கக் காரணம் யாதோ என்று கேட்க சாயி என் உபதேசத்தைக் கைவிட்ட உன்னிடம் பேசுதற்கு என்ன நீதி யுள்ளது என்று கூற, அவ்விதம் தாங்கள் கூறிய உபதேசத் தைக் கடந்து செய்த குற்றம் யாது என்று கேட்க, உன் வீட்டைநாடி வந்து தன் வயிற்றுப் பசியைப்போக்கப் பொரியரிசி யாசித்த இயல் புடையவளை.

131.

வெடுவெடுத்துச் சேவகனூற் பிடர் பிடித்துத்
திடுவலென விளம்பிச் சீற்றங்
கொடுபுரிந்த செயலென்னே ஈதோவென்
னுபதேசங் கூறென்றேத
இடர்கெடுக்குஞ் சீரடியூ ரிருப்போர்கல்
யாணியெனும் என்னூர்ச் செய்தி
உடனடுத்துள்ளவர் போன்றிங் குணர்ந்தனரே
யிவர்பால் யான் ஒளிப்பதுண்டோ,

(பொ-ரை) கடுகடுத்துச் சேவகனூற் பிடர்பிடித்துத் தள்ளி விடச் செய்வேன் என்று கூறிக் கோபமுற்றுச் செய்த காரியம் எப்படிப் பட்டது? இது தான் நான் சொல்லிய உபதேசமோ என்று கேட்க, சீரடியூரி லிருந்து அன்பர் இடரைப் போக்கும் சாயிபாபா "கல்யாணி" என்ற என்னூரின் செய்தியை உடனிருந்து அறிந்தவர்போல் அறிந்துளாரே, இவரிடத்தில் நாம் ஒளித்து வைக்கக்கூடியது யாதுளது?

132.

செய்மையினுள் ளனவெவையுந் திரிகால
நிகழ்ச்சியையுந் தெரிய வல்ல

வாய்மையினே ரிவரென்று மனத்துணர்ந்தென்
பிழையினைமன் னித்தல் வேண்டும்
தூய்மை மிகும் நும்முரையை யினிக்கடவே
னென்று ரைத்துத் தொழுதான் பின்னும்
நோய்மைதவி ரறவுரைகள் சிலவுரைத்துச்
செல்கவென நுவன்றிட்டாரே.

(பொ-ரை) தொலையில் நடக்கின்றவற்றையும், முக்கால நிகழ்ச்சிகளையும் அறிய வல்ல சத்தி மிக்கவர் இவர் என்பதாக மனத்தில் உணர்ந்து நான் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டும், நும் புனித மிகுந்த வாக்கை இனி மீறிநடவேன் என்று சொல்லி வணங்கினார். பின்னரும் துன்பத்தை ஒழிக்கும் தருமோபதேசங்கள் சொல்லிப் போய் வருக என்று அனுமதி கொடுத்தார் பாபா.

133.

விரிபுனல் வெள்ளம் பொங்கி வேலை போல் மிளிரும் கோதா
வரியெனும் யாற்றின் பாங்கர் வணங்குவோர் துதி செயோசை
குரைகடலொலி போல்மல்கக் கோயில் கொள்தத் தாத்திரேயர்
விரைமலர்க் கழல்கள் போற்ற மேவினன் ஓர்நாள் நாணு.

(பொ-ரை) பரந்த நீர் வெள்ளமாகப் பெருகிக் கடல் போல் விளங்கும் கோதாவரி யென்னும் ஆற்றின் பக்கம் வழிபடுகின்றவர், துதிக்கும் ஓசை ஒலிக்கின்ற கடல் முழக்கம் போல் நிறையக், கோவில் கொண்டிருக்கும் தத்தாத்திரேயர் மணங்கமழும் மலரடிகளைப் போற்ற ஓர்நாள் நாணு சென்றனர்.

134.

அத்தினத் தாங்கு வைகும் அருந்தவச் சாதுவைத்தான்
கைத்தலங் குவித்துப் போற்றுங் காலையிற் களித்தாங் கன்னோர்
இத்திருக் கோயினின்றும் எழில்நதி செலு மார்க்கங்கால்
வைத்திடற் கொண்ணாச் சேறு பலிதலால் யாத்திரீகர்.

(பொ-ரை) அந்நாளில் அவ்விடம் தங்கிய அரியதவச் சாதுவைத் தம் கைகள் குவித்துத் துதிக்குங் காலத்தில் அவர் மகிழ்ந்து இந்தக் கோயிலினின்றும் அழகிய ஆற்றுக்குச் செல்லும் பாதை கால் வைக்கக் கூடாதபடி சேறு நிறைந்திருப்பதால் யாத்திரீகர்கள்,

135.

இற்றுளம் வருந்தலாலவ் விடரினைத் தீர்ப்பான் வேண்டிக்
கற்றள வரிசை செய்யக் கருதினேன் பொருட் சகாயஞ்

சற்று நீ செய்க வென்று சாற்றின ரதற்கு நேர்ந்து
சொற்றவ றேன் முன்னூறெண் டொகை நிதி தருவனென்றான்.

(பொ-ரை) மனம் கெட்டு வருந்துவதனால், அத்துயரத்தை ஒழிக்க விரும்பிக் கல்லால் தளவரிசை போட யோசித்துள்ளேன் உம்மாலியன்ற பொருளுதவியைப் புரிவீராக என்றனர். அதற் கிசைந்து முன்னூறு ரூபா தருவதாக வாக்களித்தார்'

136.

சிலபகல்கடந்து கோபர்காம் மார்க்கஞ்
சீரடி செலுந்தினத் திடையில்
நிலவியதத்தாத் திரேயரின் கோவில்
நேர்வழி செலாது நேரில்லா
துலைவுறு வழிச் சென்றடியின் முட்டைத்தே
யுழன்றுபா பாவின்முன் னுற்றான்
அலைவிலா வுளத்த ரவன் முகம் நோக்கா
ராயமர்ந் திருந்தனராங்கே.

பொ-ரை) சிலநாட் கழித்துக் கோபர்காம் வழியே சீரடியூர் செல்கின்றபொழுது இடையில் விளங்கும் தத்தாத்திரேயர் கோவிலுக்கு நேர்வழியே போகாமல் தொலைவான சுற்று வழி பற்றிச் சென்றனர். செல்கையில் முட்டைத்து வருந்திப்பின் பாபாவின்சமுகம் அடைந்தனர். சஞ்சல மில்லாத் திருவுள்ள முடைய பாபா நானாவைத் திரும்பிப் பாரா மலே அமர்ந்திருந்தனர் அவ்விடம்.

137.

வந்தஎற் கருள் செயாதும் வார்த்தையாடாதும் இன்று
சிந்தையிலுவர்த்தற்கேழை செய்பிழை தெரியேனென்று
வந்தனைபுரி நானாவின் மலர்முகம் நோக்கித் தத்தர்
தந்தரிசனை செயாதும் தனிவழி செலாதும் வேறு.

(பொ-ரை) வந்த எனக்கு அனுக்கிரகம் புரியாமலும், பேசாமலும் மனத்தில் வெறுப்புக் கொள்வதற்கு இன்று எளியேன் செய்த பிழை யாதோ அறிகிலேன் என்று வணங்குகின்ற நானாவின் மலர்முகம் பார்த்து, தத்தரைத் தரிசனஞ் செய்யாமலும் நேர்வழி செல்லாமலும் வேறு.

138.

வழியிலேன் செல்லல் வேண்டும் மாண்புறு சாது வின்றன்
விழியெதிர் செலினுன் வாக்கால் விளம்பிய பொருளெங்கேயென்
றழல்வரென் றஞ்சி யன்றோ அறைந்தவென்னிதோபதேச
மொழியினை மறந்தாயுன்றன் முகத்தினில் விழிப்பதெங்ஙன்.

(போ-ரை) வழியில் என்செல்ல வேண்டும்? மாட்சிமிக்க சாதுவின் முன் சென்றால் உன்வாக்குறுதிப்படி பொருள் எங்கே யென்று கேட்பார், கோபிப்பார் என்று பயந்துதானே. அன்றுநான் எடுத்துரைத்த நன்மொழிகளையும் மறந்தனை; அத்தகைய உன் முகத்தில் விழிப்பது எங்ஙனம்.

139.

வித்தமுத வுதற்கியல விலையென்னி லுன்னைவிழுங்கி விடுவாரோ அவ்
வுத்தமச்சா தவர்க் கொளித்து வேறுவழியேகினதா லுன்காலின் முட்
டைத்துவருந் தினையன்றோ இதுவே தண்டனை நினக்கித்தகைய
[நின்பால்
எத்தகைய நலன்கண்டு பேசுவேன் எனச்சாயி இயம்பினாரே

(போ-ரை) பொருளுதவ முடியவில்லை யென்றால் அந்த உத்தமச் சாது உன்னை விழுங்கிவிடுவாரா? அவர்க்கு மறைந்து வேறு வழியாகச் சென்றதாலல்லவா உன்காலில் முள்தைக்க வருந்தலானாய் இப்படிப்பட்ட உன்னிடத்தில் நான் என்ன நன்மை கருதிப் பேசுவேன் என்பதாகச் சாயி எடுத்துரைத்தார்.

140. என்னா முனம் யான் செய்தது தவறேயினி யென்றும்
பொன்னா மெனும் விதம் நும்மொழி போற்றத் தவிரேனென்
றந் நாளுரை செய்தாங்கு தன் அணிமா நகர் சென்றான்
நன்னா வலர் புகழ்சாயி செய் நலன் மேல் நவில்வேனே.

(போ-ரை) என்று உரைப்பதன் முன்னே நான் செய்தது தவறு இனி நும் வசனத்தைப் பொன் போற் போற்றி ஒழுகுவேன் என்று அக்காலம் சொல்லித் தமது அழகிய நகர்க்குச் சென்றனர். நல்ல நாவலர் புகழ்கின்ற சாயிசெய் நலன்களை மேலும் சொல்வேன்.

141. மகமதிய னொருவன்றன் கூவமதில்
நீர் சுருங்கி வறள்தல் கண்டு
மிக வதனில் நீர்மிகச்செய் திடநினைந்து
சர்க்கார் பால் விழைந்தைந் நூறெண்
தொகை பெறுரு பாதனிசு பெற்றும் வெடி
மருந்தின்றித் தோயங் காண்டல்
இக மதி லொண்ணாமையினால் அம்மருந்து
பெறக்க லெக்ட ரிடத்திற் சென்று

(போ-ரை) மகமதிய னொருவன்தன் கிணற்றில் நீர் குறைந்து வறண்டு போவதைக் கண்டு அதில் நீர் மிகும்படி செயயக்கருதிச் சர்க்கார் மூலம் ஐந்நூறு ரூபா கடனாகப் பெற்றும் வெடிமருந் தில்லாமல் கிணற்றில் நீர் காண்பது அரிது என்றறிந்து அதனை வேண்டிக் கலெக்டரிடத்திற் போய்.

142. உத்தாரந் தருகவென மனுக்களிரு
  முறை கொடுத்தும் உள்ளம் மிக்க
வித்தார மில்லாத கலெக்டர் மனுக்
  களைத்தள்ளி விட்டதாலே
கத்தாவின் செயலிதெனக் கண்டெவரிக்
  காரியங்கை கூடச் செய்வர்
இத்தா ரணியிலெனச் சிந்தித்து நம்பா
  பாவன்றி யெவரும் இல்லை

(பொ-ரை) அனுமதி தருக என்று மனுக்கள் இரண்டு தடவை கொடுத்தும் பரந்த நோக்கமற்ற கலெக்டர் மனுக்களைத்தள்ளி விட்டதனுல் இது கடவுள் செயல் என்று அறிந்து இப்பூமியில் இக்காரியத்தைக் கைகூடச் செய்ய வல்லவர் யாவர் என்று எண்ணிப்பார்த்ததில் நம் பாபா வைத் தவிர வேறு யாரும் இல்லை.

143. ஆதலினங் கவர்பாற் சென் றிடுவ லெனச்
  சீரடியூ ரடைந்து சாயி
பாத மலர் தொழுதகுறை யிரந்து நிற்ப
  நானுபாற் பயனீ யெய்தற்
கோதிடுவ னெனப் புகன்று நானுவை
  யழைத்திவன்றன் உள்ளத் தெண்ணம்
தீதறமுற் றிடப்புரிதி யெனப் புகன்று
  ராங்கவனுஞ் செப்பலுற்றுன்

(பொ-ரை) ஆகையால் அவரிடமே செல்வேன் என்று சீரடியூர் போய்ச் சாயியின் அடிமலரைவணங்கிக் குறையைத் தெரிவித்துநிற்க, நானு மூலம் நீ அடையும் படி செய்வேன் என்று நானுவை வரவழைத்து, இம்மகமதியன் விரும்பும் விஷயத்தைக் குற்றமில்லாதபடி நிறைவேற்றி வைக்கக்கடவை என்று பகர்ந்தார். அப்பொழுது அவர் சொல்லலானுர்.

144. இருமுறை மனுவைத் தள்ளிய கலெக்ட
  ரிட மெடுத்துரைப்பினு மிவற்குத்
தருநல னென்றெவ் விதம் புகல் கிற்பேன்
  சற்குரு வேயென நீயிவ்
வொரு முறை யவன்பா லுரையவன் மனுவுக்
  குத்தரவளிப்ப னென்றுரைக்கத்
திருமுனி மொழி போற் செப்பினன் கலெக்டர்
  செய்தனர் மனுவுக் குத்தரவே.

(பொ-ரை) சற்குருவே, இரண்டுதடவை மனுவைத் தள்ளிய கலெக்டரிடம் எடுத்துப் பேசினும், இவனுக்கு நலம் உண்டாகும் என்று எவ்விதம் சொல்ல வல்லேன் என்றுரைக்க, இந்த ஒருதடவை அவரிடம் எடுத்துரை, மனுவுக்கு அனுமதி அளிப்பார் என்று கூறிய, சாயிபாபா

வின் சொற்படியே கலெக்டரிடம் பேச அவரும் மனுவுக்கு உத்தரவு கொடுத்தார்.

145. வெடி மருந்துதவ முன் மறுத் தொழிந்த
மேதகு முயர் ஜில்லாக் கலெக்டர்
கடினவன் மனத்தைத் தமவசந்திருப்பிக்
காரிய சித்தியை யுறச் செய்
அடிகளுக்கென்னே யான்புரி குவதென்
றறைந்தந்த மகமதுத் தலைவன்
கடிதினூர் சென்று கிணற்று நீர் பெருக்கிக்
கவினுட னிருந்தனன் களித்தே.

(பொ-ரை) வெடி மருந்து உதவும்படி மனுச் செய்ததை முன்னர் மறுத்து ஒழித்த மேன்மை வாய்ந்த உயர்ந்த ஜில்லாக் கலெக்டரின் கடின வலிய மனத்தைத் தம் வசமாக்கிக் காரியத்தை வெற்றியுறச் செய்த சுவாமிகளுக்குக் கைம்மாறு யாது செய்ய வல்லவன் என்று சொல்லி அந்த மகமதியத் தலைவன் விரைந்து தன் ஊர் போய்க்கிணற்று நீரைப் பெருக்கி மகிழ்ச்சியுடன் அழகு பெற வாழ்ந்தனன்.

146

பொருளெல்லாவற்றினிலும்தெய்வமுளதெனநினைந்தப்
[பொருள்கள் யாவும்
அருள்கொண்டுகடவுளுறைஆலயமென்றனுதினமும்
[அகத்திலெண்ணித்
தெருள்கொண்டுசமமாகநோக்கிடுதல்வேண்டுமன்றிச் சித்தம்வேறாய்
மருள்கொண்டுமிகவுயர்ந்தகுலத்தோர்க்கேஅன்னமிடல்
[வழக்காறென்றும்,

(பொ-ரை) எல்லாப் பொருள்களிடத்தும் கடவுள் இருக்கிறார் என எண்ணிப் பொருள்கள் யாவும் கடவுள் அருளுடன் வீற்றிருக்கும் கோவில் என்று மனத்தில் நினைந்து அறிவினால் யாவும் சமமென்று பார்த்தல் வேண்டும். மனம் வேறுபட்டு மயக்கத்தால் மிக உயர்ந்த வகுப்பாருக்கே அன்னம் அளிப்பது முறையென்றும்.

147

இழிகுலத்தோர்க் கிடல்மரபன் றென்றும்வித்தி யாசமுட
[னெண்ணு வோர்க்கு
மொழிமனதுக் கெட்டாத கடவுளருள் வாய்த்திடா மூறையின் ஓர்க
பழிதபுநன் மரபின்வந்தோரெனப்பாபாநாளுவின் பான்மையைக்கண்
டழிதரசசெய் விபரீத வுணர்ச்சியினையற வொழித்தாரறையக்
[கேண்மோ.

(போ-ரை) தாழ்ந்த வகுப்பாருக்கு இடுவது முறையன்றென்றும் வித்தியாசமுடன் கருதுபவர்க்கு வாக்கு மனதுக்கு எட்டாத கடவுள் திருவருள் வாய்க்காது என்பதை முறையாக ஆராய்க. குற்றமற்ற நற்குலத்தில் தோன்றிய நாணுவேயென்று பாபா நாணுவின் கேட்டுக்குக் காரணமான வேறுபாட்டுணர்ச்சியை முற்றிலும் போக்கிவிட்டனர். அதனைக் கூறுவேன்.

148

இன்னவன்பாராயணஞ்சபம்ஓமம்எனுமிவைபுரியுமாசார
மன்னிய சீலன் வைச் வதேவமெனும் மகத்தினை மகிழ்வுடன்
[ஆற்றிப்
பின்னொரு பசப்பால் கறந்திடு நேரம் பெருந்தெருவதனினின்ற திதி
தன்னெதிர் வரவை நோக்கிக்காத் திருப்பன் சந்ததம் உண
[வருந்திடுமுன்

(போ-ரை) பாராயணம் செபம் ஓமம் இவற்றைச் செய்யும் ஆசார சீலராகிய இவர் "வைச்வதேவம்" என்னும் மகத்தை மகிழ்வுடன் செய்து பின் ஒரு பசு பால்கறக்கும் நேரம் வரை பெருந்தெருவில் நின்று தாம் சாப்பிடுவதன்முன் அதிதியின் வருகையை எதிர்நோக்கிக் காத்திருப்பர்.

149

பலபகல்காத் திருந்தும் அதிதியர் வரக்கா ணமையினற் பழுதிலாத
நலனுரைக்கும் மறைவியர்த்தக் கட்டளையிட்டது வெனென்று
[நலிந்தா சங்கை
சிலவுளத்திற்கொண்டதனைத்தெளியுப்வணஞ் சீரடிக்குச் சென்றார்
[அன்னர்
சொலுவதற்குவாய்திறக்கு முனமறிந்து பாபாவுஞ் சொல்வ
[தானர்.

(போ-ரை) பலபகல்காத்திருந்தும் அதிதிவரக்காணமையால் குற்றமற்ற நன்மையைக்கூறும் வேதத்தின் வியர்த்தக் கட்டளை இது என்று வருந்திச் சில சந்தேகங்கொண்டு அதனைத் தெளிவுபெறும் வகையில் சீரடிக்குச் சென்றார். அங்ஙனஞ் சென்ற அவர் வாய்திறக்கு முன்பே பாபாவும் சொல்லலானர்.

150

அதிதியர்நின்முன்புவந்து காத்திருப்ப ரோவேதம் அருளிச்செய்த
விதிபிழையே யன்றுனது வியாக் யானமே பிழைநின் வியாக்
[யானத்தால்
துதியதிதி யாவோரோ ரிரண்டுகால் கைகளுடன்தோன்றி நிற்கும்
புதியரென்றும் அவரும் மறையவரென்றும் பொருள் கொண்
[டாய் போதம் இல்லாய்

(போ-ரை) அதிதிகள் நின் முன்புவந்து காத்திருப்பார்களோ? வேதம் அருளிச் செய்த விதி தவறன்று. உனது தாற்பரியமே தவறு. உன் வியாக்கியானத்தால் துதிக்கப்படும் அதிதியாவோர் ஓரிரண்டு கால்கைகளுடன் தோன்றி நிற்கும் புதியர் என்றும், அவரும் மறையவர் என்றும் அருத்தம் பண்ணிக் கொண்டாய் அறிவில்லாதவனே.

151

எத்தனையோ அதிதிகள்வெம் பசியால்நொந் துனக்கெதிர்
[நின்றிடுதல் கண்டும்
நித்தமவர்களை யறியா ததிதிகள்வந் திலரென்று நினைந்தாய்
[அந்தோ
அத்தகைய அதிதிகள்யா ரெனிற் புகல்வேன் தெருவில் வரும்
[ஆவும் மாவும்
உத்தமமாங் காகமுதல் ஈயெறும்பு மாமென்ன வுணர்தி யன்றே.

(போ-ரை) எவ்வளவோ அதிதிகள் கொடிய பசியால் வருந்தி உனக்கு நேரில் நிற்பதைப் பார்த்தும் தினமும் அவர்களையறியாமல் அதிதிகள் வரவில்லையென்று எண்ணினாய். ஐயோ! அப்படிப்பட்ட அதிதிகள் யாவரென்று வினவில் சொல்வேன். வீதியில் வருகின்ற பசு முதலிய மிருகங்களும் மேலான காகம்முதல் ஈஎறும்பு முதலியனவும் ஆகும் என்று உணர்வாயாக.

152

உண்பதற்குமுன்பு செயும் வைச்வதே வத்தினைச்செய் துடன்
[அன்னத்தைப்
பண்புடனீபுறம்போந்துன் வீட்டருகில் வைத்திடுதி பசி வந்துற்றால்
எண்பெறுயிர்வர்க்கமெலாம் வந்து புசித்திடக் காண்பையீறிலாது
விண்புவியிற்சரமசர மெவற்றுநிறை பரம்பொருட்கும் விருப்ப
[மாமால்

(போ-ரை) சாப்பிடுவதற்குமுன்பு செய்யும் வைச்வதேவத்தினைச் செய்து உடனே வெளியே வந்து அன்னத்தைப் பண்பாக உன் வீட்டுப் பக்கத்தில் வைத்து விடுக. பசிவந்த காலத்தில் எண்ணப்பெறுகின்ற உயிர்க்கூட்டம் எல்லாம்வந்து சாப்பிடக் காண்பாய். முடிவில்லாமல் விண்ணிலும் மண்ணிலும் இருக்கும் அசையும்பொருள் அசையாப் பொருள் யாவற்றிலும் நிறைந்திருக்கும் பரம்பொருட்கடவுட்கும் விருப்பமாகும்.

153

இன்னவாறு பாபாவங் கிசைத்த மொழிகேட்டுளந்தெளிந்து
தன்னுளிருந்த பேதவெணந் தணந்தெவ்வுயிருஞ் சமமென்ன
முன்னி நாஞு வுணவளித்து முன்செய் தவத்தின் பயன் [கொண்டான்
பன்னுமிவனுக்குய்யும் நெறி பகர்ந்த செய்தி பலப் பலவே.

(போ-ரை) இவ்விதம் பாபா அப்பொழுது கூறிய வாசகங் கேட்டு மனந்தெளிந்து தம்மிடம் இருந்த விபரீத எண்ணம் நீங்கி எல்லாவுயிரும் ஒப்பே எனக்கருதி நாஞு உணவு கொடுத்து முன் செய்த தவப் பயனை அடைந்தார். சொல்லப்பட்ட நாஞுவுக்கு உய்யும் வழியாக உபதேசிக்கப் பட்ட மொழிகள் மிகவும்பல.

154

தாசகணுகணபதி ராவ்தத்தாத்ரேய சகஸ்ரபுத்தே யெனும் [பெயரோன் தன்னைப் பாபா
நேசமுடன் வலிந்தாட் கொண்டாண்டபின்னர் நிகழ்த்திய வற்புத [மதனை கெடுநீர் சூழ்ந்த
தேசமறிந்திடப்புகல்வேன் இன்னுனோர்நாள் தெய்வகங் கை [யெனுங்கோதாவரிதீர்த்தத்தில்
பாசவினை கெடப்படியச் செல்லவேண்டிப் பாபா முன்னிலைய [தனிற் பகர்ந்தானன்றே.

(போ-ரை) தாசகணு கணபதிராவ்தத்தாத்ரேயசகஸ்ரபுத்தே யென்னும் பெயருடையவனைப் பாபா வலிய அன்புடன் ஆட்கொண்ட பின்னர்ச் செய்த அற்புதத்தை நீண்ட கடல் சூழ்ந்த தேசத்திலுள்ளவர்கள் அறியும் வண்ணம் கூறுவேன். இவன் ஓர்நாள் தெய்வத் தன்மை வாய்ந்த கங்கையென்று கருதப்படும் கோதாவரி தீர்த்தத்தில் முழுகப் பாசம் பொருந்திய வினையானது கெடுவதற்காகப் போக விரும்பிப் பாபா சமுகத் தில் தெரிவித்தான்.

155. பகர்ந்தோனை யாங்குசெல்ல வேண்டா ஈங்குப்
பகீரதிதீர்த் தந்தருதும் பார் நீ யென்றங்
குகந்துனது கரமேந்தென் றேதம் பாதத்
தூற்று நீர் போற்சுரந்த வுதகந் தன்னை
யகங்குளிரப் பொழிந்திடக் கண் டிதுவே தூய
ஆகாய கங்கைநீ ராகுமென்று
புகழ்ந் திவர்மா லவதார மென்று போற்றிப்
புரோட்சித்தான் சிரமிசையப் புனித நீரை.

(பொ-ரை) தெரிவித்தவனிடம் அவ்விடம் நீ போக வேண்டாம். இவ்விடத்திலேயே கங்கை நீரைத் தருவோம். பார்க்க என்று, மகிழ்வுடன் அவன் கைகளிற் பிடிக்கச் சொல்லித் தம் பாதத்தினின்றும் ஊற்றுநீர்போற் பெருகிவந்த நீரை மனங்குளிரச் சொரிந்திடக்கண்டு மகிழ்ந்து இதுதான் தூய ஆகாய கங்கையாகுமென்று பாராட்டிப் பாபாவைத் திருமாலவதார புருடரென்று புகழ்ந்து துதித்து அப்புனிதமான தீர்த்தத்தைத் தன் தலை மேல் தெளித்துக் கொண்டான்.

156. அற்புத மற்புதமென்றே மிகக்கொண்டாடி
யருந்தவர்பாற்பத்திசிரத்தைகள்மேலோங்கித்
தற்பரனென் றகமினைந்துகீர்த்தனங்கள்
சாயிபா பாவெனுமித் தவத்தர் மீது
பற்பலபா டித்துதித்துத் யோகத்திற் செய்
பாவமு முற் பவத்தினிற் செய் பாவமுந்தீர்ந்
திற்றுறவி யெனவிருந்து சிறப்புப் பெற்றான்
இன்னுமருந்தவர்செய் சித்தி யியம்பு வேனே.

(பொ-ரை) ஆச்சரியம் ஆச்சரியம் என்று மிகப் பாராட்டி அருந் தவசியிடமிருந்த பக்திசிரத்தைபூண்டு அவரைக் கடவுள் என்றே மன தில் எண்ணி அச்சாயிபாபா மீது கீர்த்தனங்கள் பல பாடித்துதித்து, உத் தியோகத்திற் செய்த பாபமும், முற்பிறப்பிற் செய்த பாபமும் ஒழியும் வண்ணம் இல்வாழ்க்கையிலிருந்தே துறவியென விளங்கிச் சிறப்புப் பெற்றனன். மேலும் அருந்தவர் செய்த சித்திகளைக் கூறுவேன்.

157. புத்திரியர் தமக்கு வர னுடிவந்தோர்க்
கவர் விழைவு பூர்த்திசெய்தும்
நத்திமகப் பேறடைய வேண்டினர்க்குச்
சந்தானம் நனிய ளித்தும்
எத்திசையும் வந்துதொழச் சிறுவர்சிறு
மியர்க்கு வந்த விடுக்கண் தீர்த்தும்
தத்துதிரைக்கடலுலகிலிவர்புரிசித்
தியின் மகிமை சாற்றொணுதே.

(போ-ரை) பெண்மக்கட்குக் கணவன்மாரைத் தேடி வந்தோர்க்கு அவர்கள் விருப்பத்தை நிறைவேற்றி வைத்தும், மகப்பேற்றை விரும்பி வந்தவர்கட்கு மகப்பேற்றை யளித்தும், எத்திசையிலுள்ளோரும் வந்து தொழும்படி சிறுவர் சிறுமியர்கட்கு வந்த துன்பந்துடைத்தும் உள்ள இவர்தம் சித்திச் சிறப்புக்களை மோதுகின்ற அலைகடல் சூழ்ந்த உலகத்தில் எடுத்துச் சொல்ல முடியாது.

158

**காசிநாதரென்ற உபாசனி பாபாவுக்கு அருள் செய்தது.**

சீருறு சதாநாவென்னுந் திருப் பெயர் பூண்ட தொன்மை
யூருறு காசிநாத ருபாசனி பாபா வென்னும்
பேருறுதவத்தர் தம்மைப் பிறவிநோய் போக்கிச் சாயி
காருறு கருணைகொண்டு காத்த நற்கதை சொல்வேனே.

(போ-ரை) சிறப்புப்பொருந்திய சதாநா என்னும் அழகிய பெயரைக் கொண்ட பழைய ஊரில் பொருந்திய காசிநாதர் என்றும் உபாசனி என்றும் பேரமைந்த தவசியைச் சாயி கருணைகொண்டு பிறவிநோயைப் போக்கிக்காத்த நற்கதையைச் சொல்வேன்.

159

தவ மிகு காசி நாதர் தம்மிலாளுடனோர் வைகல்
அவமொழித் தருள்செய் தீர்த்த யாத்திரை யதனை நாடி
நவ மிகு வளங்கணவகும் நருமதை நதியின் பாங்கர்
உவமையில் பொருளா யோங்கும் ஓங்கார இலிங்கத்தின் முன்

(போ ரை) ஒரு நாள் தவஞ்சிறந்த காசிநாதர் தம் மனைவியுடன் பாவத்தைநீக்கி யருள் புரியும் தீர்த்த யாத்திரையை விரும்பிப் புதுமை மிக்க வளங்கள் அளிக்கும் நருமதை நதியின் பக்கம் ஒப்பில்லாத பொருளாகச் சிறக்கும் ஓங்கார இலிங்கத்தின்முன்பு

160. போந்திருந்து பிராணயா மஞ் செய்கின்ற
போழ்துசுவா சம்புரண்டு புவியில் வீழ்ந்தார்
சாந்துயரோ டொடுங்குதல்கண் டவர் பாங்குள்ள
தார மயக் கந்தெளியத் தண்ணீர் கைக் கொண்
டாய்ந்த அவர் முகந்தெளித்து நினைவுண்டாக்க
அயர்ச்சியகன் றகந்தெளிந்தாரதற்குப் பின்னும்
பாந்துசுவா சத்தடைவிட் டகல்கிலாத
பான்மை யினால் மிகவுமுளம் பரிந்து நொந்தார்.

(போ-ரை) போய்ப் பிராணுயாமஞ் செய்கின்ற காலத்தில் சுவாசம் மாறிப் பூமியில் வீழ்ந்தார். இறக்குந் துன்பத்துடன் ஒடுங்குதலைப் பார்த்து அவர்பக்கம் இருந்த மனைவி மயக்கந் தீர்ந்து தெளியும்படி தண்ணீரைக் கையிலெடுத்து அவர் முகத்தில் தெளித்துத் தெளிவுண்டாக்கச் சோர்வு நீங்கி மனம் தெளிந்தார். அதற்குப்பின்னரும் பதுங்கிய மூச்சுத்தடை விட்டு நீங்காமையினுல் மிகுதியும் மனம் வருந்தி நொந்தார்.

161

உண்டியுணவியலாதுஞ் சுவாசம்விட முடியாதும் உயங்கிவாடி
எண்டிசையிலுந்திரிந்தும் பரிகாரங்கிட்டாமல் எவரேனும்
மண்டலத்தில் மகான்களுள ரெனிலவர்பாற் சென்றிதனை வழுத்து
[வேன்யான்
கொண்டதுய ரவர்போக்கா விடில் மாய்வேன் இதுவேநற் குறிக்
[கோளென்று,

(போ-ரை) உணவையுட்கொள்ள முடியாமலும், மூச்சுவிடமுடியாமலும் வருந்தி வாடி எட்டுத்திக்கிலும் போய்ப் பரிகாரங்கிட்டாமல், பூமியில் மகான்கள் யாவரேனும் இருப்பின், அவரிடம் சென்று இதனை முறையிடுவேன். அவர் யான் கொண்ட துயரைப் போக்காது போனுல் இறந்து போவேன், இதுவே நல்ல கொள்கை என்று.

162

கருதியெவர் துணையுமின்றித் தமியராய்ப் புறப்பட்டுக் காசி நாதர்
விருதுபெற ராகூரி யெனு மூர்க்கூ கர்னியென விளங்கும் யோகி
பரிதியெனவடைந் தோரின் மலவிருளைப் பாற்றி நலம் பாலிப்
[பாரென்
றரிதுணர்மே லோர்புகல வறிந்து மனந்துணிந்தவர் பாலடைந்
[தாரன்றே.

(போ-ரை) சிந்தித்துக் காசிநாதர் எவ்விதத் துணையுமில்லாமல் தனியே புறப்பட்டு, விருதுபெற்ற ராகூரி என்னும் ஊரில், கூகர்னி என்று விளங்கும் யோகி, தம்மை அடைந்தாரின் மலவிருளைச் சூரியன் போல் நீக்கிக்காப்பவர் என்பதாக மேன்மை யுணர்ந்த பெரியோர் சொல்லத் தெரிந்து அவரிடம் மனத்துணிவுடன் அடைந்தார்.

163

அடைந்த வவர் நிருவிகற்ப சமாதியைக்கண்டதிசயமுற்றவர்
[பாலுற்ற
திடம்படு யோ கப்பயிற்சிப் பிராணுயா மத்தில் வந்த தீங்கை
[யெண்ணி
உடம்படு மிம் மூச்சொடுக்க மெளிதன்று தீர்ப்போரிவ் வுலகம்
[போற்று
மடம்படு சீ ரடியிலுள அவாலியாச் சாயி யன்றி மற்றியாரே.

(போ-ரை) அடைந்தவரின் நிருவிகற்ப சமாதியைக்கண்டு ஆச்சரி யமுற்று, அவரிடம் பொருந்திய உறுதியான யோகப் பயிற்சியின் பிராணு யாமத்தில் வந்த கேட்டை எண்ணிப் பொருந்தும் இம்மூச்சொடுக்கம் எளி தானதன்று, இதனைத் தீர்க்க வல்லவர் இந்நிலவுலகமெல்லாம் புகழும் அறியாமையைப் போக்கும் சீரடியூரிலுள்ள அவாலியாச் சாயியே, மற்றெ வராலும் ஆகாது.

164

அவர் பாற் சென்றிடுதல்நல னெனயோகி கூறலுற்று ரதனைக் [கேட்டத்
தவர்சாயி யவாலியாவெனும் பெயர்சார்ந்திருத்தலினற் சகத்தோர் [நெஞ்சைக்
கவர்யோகரிவரோர்மக மதிய ரன்றோ ஆங்கவர்தங் காலில் வீழ்தற்
கெவர்தாமிங் கிசை வரெனவெண்ணியவரிடமேகாதிருந் [தாரன்றே

(போ-ரை) அத்தகையாரிடம் செல்வதே நன்மையானது என்று யோகி கூறினர். அதைக்கேட்டு அத்தவர்சாயி அவாலியா எனும் பெயர் சேர்ந்திருப்பதனுல், சகத்தவர் மனதைக்கவரும் யோகியாகிய அவர் மக மதியரல்லவா? அவ்விடம் அவர் காலில் விழுவதற்கு இவ்விடம் இசைகின்றவர் யாவரென்றெண்ணிச் சாயியிடம் போகாதிருந்தார்.

165

சாதிமதபேத மற்றோர்தாமன்றோ மகான்களெனச் சாற்றத்தக்கோர்
பேதமதை யொழித்தவர்பா லேகுவீரெனப் பலபேர் பேசக் கேட்டும்
ஓதுமவர் மொழிதமக் கங்கொவ்வாத காரணத்தாலுடன் படாது
வேதமதத்தினரவர்பா லேகாது விளம்பனஞ் செய் நாளி [லோர்நாள்

(போ-ரை) சாதிமத வித்தியாச மில்லாதவர்கள்தாம் மகான்கள் என்று சொல்லப்படுவர். இத்தகைய வித்தியாசத்தை ஒழித்த சாயியிடம் போவீர் என்று பலர் சொல்லக்கேட்டும், சொல்லுகின்றவர் சொல் தமக்குப் பொருந்தாத காரணத்தினுல் சம்மதியாது வேத மார்க்கத்தினர் அவரிடம் செல்லாமலே காலதாமதம் செய்துவரும் நாட்களில் ஒருநாள்.

166

வீதிவழி செலும் போழ்து வயது முதிரொருவரிவர் விழிமுன்
[தோன்றித்
தீது புரி பிணி வாயுவால் நேர்ந்ததததற்குவெந்நீர் சிறிதுட்
[கொண்டால்
பீதிசெயந் நோயகலு மென மொழிந்து மறைந்தனரப்
[பெரியார் சொல்லைப்
போதநலந்தரு சொலெனப் போற்றுதும் பொய்யுடலைப் பொருள்
[செயாதும்,

(போ-ரை) தெருவழியே போகும்பொழுது, வயது முதிர்ந்த ஒருவர் இவர் கண்முன்தோன்றிக் கெடுதிவிளைக்கும் உனது நோய் வாயுவால் நேர்ந்ததாகும். அதற்கு வெந்நீர் கொஞ்சம் சாப்பிட்டால் பயம் விளைக்கும் அந்நோய் நீங்கிவிடும் என்று சொல்லி மறைந்து போயினர். அப்பெரியார் பேச்சை மிக நன்மை பயக்கும் வார்த்தை எனப் போற்றுமலும் பொய்யுடலைப் பொருட்படுத்தாமலும்,

167. வெறுத்தொருகள் ளிப்புதருட் சமாதி யுற்று
வெம்பசிவந் திடிலதனை மேவா வண்ணம்
பொறுத்துமிகி லக்கனியைப் புசித்தும் சின்னாட்
போக்கினர் பெருந்தாகம் பொருந்துங்காலை
ஒறுத்துமொறுக் கொண்ணாத நிலையால் யாற்றிற்
குசகமுணச் சென்றிடும்போ துண்ணேல் நீரை
நிறுத்து நிறுத்தெனக் குளிர் நீர் பருகே லென்று
நிகழ்த்தின னன்றோ விந்த நீரை யுண்டு,

(போ-ரை) வெறுப்புடன் ஒரு கள்ளிப் புதரினுள் சமாதி யடைந்து கொடும்பசியுண்டானால் அது பொருந்தாத முறையில் பொறுத்தும், அதிகப்படில் அக்கள்ளிப் பழத்தையே சாப்பிட்டும் சிலநாட் போக்கினர். பெரிய தாகம் ஏற்பட்ட பொழுது அடக்கியும், அடக்க முடியாத நிலையால் ஆற்றில் நீரைப் பருகச் செல்லும்பொழுது, இந்நீரைக் குடிக்காதே, குடிக்காதே, குளிர் நீரைப் பருகாதே என்று கூறினேன் அல்லவா? இந்த நீரைப்பருகி,

168. பொன்றநினைந் தனையோவெந் நீருண்ணென்று
புகன்று மறைந்தனரிவர்முன் போந்து முன்னர்க்
கன்றினைக் காண் சேதாப் போலிரங்கித் திவ்ய
காட்சிதந்து நோய்மருந்து கழறினோரென்
றன்றதனைச் செவிக்கொண் டாங் கருகிலுள்ள
வகத்தினில்வெந் நீர் வேண்டியருந்தலுற்றார்
மன்றவுட லிணைவருத்திப் பன்னாள் நீங்கா
வன்பிணிகாற் றிடைப் பஞ்சாய் மாய்ந்ததன்றே.

(போ-ரை) இறக்க எண்ணினாயோ? வெந்நீர் பருகு என்று கூறி மறைந்தனர். இவர் முன் வந்து கன்றைக்கண்ட தாய்ப்பசுவைப்போல இரங்கித்திவ்விய காட்சிகொடுத்து நோய்க்கு மருந்துஞ் சொல்லியவர் என்று கருதி அப்பொழுது அதனைக் கேட்டபடியே பக்கத்திலுள்ள வீட்டில் வெந்நீர் வேண்டிப் பெற்றுச் சாப்பிட்டார். உடம்பை மிகுதியும் வருத்திப் பலநாளாக நீங்காதிருந்த கொடிய நோய் காற்றில் அகப்பட்ட பஞ்சுபோலப் பறந்தொழிந்து அப்பொழுதே நீங்கியது.

169

அக்கொடு நோய் தீர்ந்துந்தம் அருங்குல வொழுக்கத்தாலும்
பக்குவம் நிறையாதாலும் பருவரலொழிக்கும் பாபா
புக்குறை மசூதி செல்லப் பொருந்திடா வுளத்தராகி
யிக்குவ லயத்தில் வாளா விருந்தனர் காசிநாதர்.

(போ-ரை) அந்தக் கொடிய நோய் நீங்கியும், தம் அரிய குலாசாரத்தாலும், பக்குவ முதிர்ச்சியின்மையாலும் துன்பந்துடைக்கும் பாபா புகுந்து தங்கியிருக்கும் மசூதியையடைய மனம் பொருந்தாதவராய் இப் பூமியில் சும்மா இருந்தனர் காசிநாதர்.

170

நாள் செலச் செலப் பாபாவின் நளின நாண் மலரை யொத்த
தாள் பணி யெண்ணந் தூண்டித் தமையறியாதே யீர்ப்பக்
கோள்பல கடிந்தோர் தம்மூர் குறுகுமார்க்கத் திலந்த
நீள்பதி யிருத்தல் கண்டு நினைந்தனர் யோகி சொல்லை

(போ-ரை) இங்ஙனம் நாள்பல கடந்துபோக, பாபாவின் தாமரைப் பூவைப்போன்ற பாதங்களை வணங்குவாய் என்னும் நினைவு தூண்டித் தம்மையறியாமலே இழுக்க, குற்றம் யாவற்றையும் நீக்கிய காசிநாதர் தம்மூர் அடையும் வழியில் சீரடி யென்னும் அந்தப் பெரிய நகர் இருத்தலைக் கண்டு யோகி வார்த்தையை எண்ணினார்.

171

முன்பல பகர்ந்தார் யோகி முதியரா யென்முன் வந்தென்
றன்பிணி தவிருமார்க்கம் சாற்றிய தவத்தி னோரும்
அன்புறு மவரே போலும் ஆதலின் அவர்வாழூர்க்கிங்
கின்புடன் செல்லுவேனென் றேகினார் சீரடிக்கே.

(போ-ரை) கூகர்னி யென்னும் யோகி இவரைப்பற்றி முன்பு பல கூறினர். வயோதிகராய் வந்து வழியில் என் நோய் நீங்கும் மார்க்கத்தைக் கூறிய அன்புடைய தவத்தினரும் அவரேயாகும். ஆகையால் அவர் வாழ்கின்ற சீரடிக்கு இன்பமுடன் போவேனென்று போகலானார்.

172

சென்று சாயி திருவடிப் போதினை
நின் று தாழ்ந்து நிலத்தினில் வீழ்ந்தெழுந்
தொன்று மன்பொ டுளங்களி யுற்றனர்
தன்று பாசத் தொடர்பினைப் போக்கியே.

(பொ-ரை) போய், சாயி திருவடி மலர்களில் வீழ்ந்து வணங்கி எழுந்து நெருங்கிய பாசத் தொடர்பைப் போக்கிப் பொருந்து மன்புடன் மனங்களி கூர்ந்தனர்.

173

செய்வ தின்ன தெனத்தெரி யாவகை
செய்ய சிந்தை திகைத்தவர் சீரடி
வைய மேத்து மகிமையை வாய்மையென்
றைய மின்றி யறிந்தன ராங்கரோ.

(பொ-ரை) செய்வது இன்னது என்று தெரியாதபடி குற்றமற்ற மனந்திகைத்தனர். உலகினர் சீரடியைத் துதிக்கின்ற மகத்துவம் யாவும் உண்மையானவை என்று சந்தேகமில்லாமல் உணர்ந்தார்.

174

அங்கு சித்தம் அடங்கி யிரண்டுநாள்
தங்கி யன்பொடு தம்பதி போம் வணம்
இங்கு நல்விடை ஈகென வேத்தினர்
மங்குல் மானுமம் மாதவர் தாளிணை

(பொ-ரை) அவ்விடத்து இரண்டு நாள் மன அடக்கத்துடன் தங்கி யிருந்து தம் பதிபோக இவ்விடத்து விடைதருக என்று மேகத்தை யொத்த அம்மாதவர் அடிகளை அன்புடன் வேண்டித்துதித்தார்.

175

பக்குவம் பெறு பத்தரை விட்டகன்
றெக்க ணத்தும் இருந்திட வெண்ணிலார்
மக்க ளிற்சிறந் தோயொரு வாரத்தில்
புக்கு மீண்டு பொருந்துதி யீங்கென.

(பொ-ரை) பக்குவம் வாய்ந்த அன்பரை எக்காலத்தும் பிரிந்திருக்கக்கருதாத சாயி, மனிதரிற் சிறந்தவனே! போய் ஒரு வாரத்தில் இங்கு மறுபடியும் திரும்புவாய் என்றார்.

176

பொய்யுடம்பைப் பொருளெனப்போற்று மிவ்
வைய மீதில் மனைத்துணை வாழ்க்கையில்
பையு ளெய்திடும் பாவமு ளேனெவா
றைய வாரத் தடைகுவ னென்றனர்.

(போ-ரை) நிலையற்ற உடம்பைப் பொருளாகப் போற்றுகின்ற இப்பூமண்டலத்தில், மனைவியுடன் வாழும் இல்வாழ்க்கைத் துயரத்தில் பொருந்தியுள்ள பாவியேன் ஒரு வாரத்தில் எவ்விதம் திரும்புவேன் என்றனர்.

177

இவர்மனங் குழம்பி நின்ற வியல்பினை யுணர்ந்த அம்மா
தவர் மனங் கலங்கி டேலுன் றன்னகர்ச் சார்ந்துவா நின்
கவர் மன மொருங்க வீண்டுக் கவனித்துக் கொள்கின்றேனென்
றெவர்மன நிலையுமோர் வோரிறை மொழிபீந்தா ரன்றே

(போ-ரை) இங்ஙனம் மனங்கலங்கி நின்ற தன்மையை அறிந்த அம்மாதவர், மனங்கலங்காதே, உன்னுடைய நகரடைந்து வா. நின் பிளவு படுமனம் ஒன்றுபடும் வகையை நான் கவனித்துக் கொள்கின்றேன் என்று விடைகொடுத்தார் அப்பொழுதே.

178

உத்தரம் பெற்றுச் செல்வோ ருறை தமதூர்செ லாமல்
எத்தனையோவூர்சுற்றி யீரிரண்டுடன் மூன்றும் நாள்
மெய்த்தவர் திருமுன்னுற்றார் விரைந்திவ ணொருவாரத்தில்
இத்தலத் தெய்த வொண்ணா தென்றநீ யெவ்வாறுற்றாய்.

(போ-ரை) விடைபெற்றுச் செல்கின்றவர், தாம் வசிக்கும் ஊர்க்குப் போகாமல் எவ்வளவோ ஊர்கள் சுற்றி ஏழாம்நாள் மெய்த்தவர் சமுகம் அடைந்தார். இவ்விடம், ஒரு வாரத்தில் திரும்பமுடியாதென்ற நீ எவ் விதம் திரும்பி வந்தனை ?

179

அன்பவென் றறைந்தார் யாதும் அறிகிலேன் அடியனேனும்
புன்பிறப் பொழித்து வீடு பொருந்திடப் புரியும் நும்தம்
இன்புறு செயலே யன்றி யென்செய லென வொன்றுண்டோ
மன்பதைக் கருளுந்தூய மாதவமணியே யென்றார்.

(போ-ரை) அன்பனே! என்று கேட்டனர். அடியனேன் யாதும் அறிகிலேன்; மக்கட்கூட்டத்துக்கு அனுக்கிரகம்புரியும் மாதவ மணியே! அற்பமான பிறப்பை யொழித்து முத்தியடையச்செய்யும். நம்முடைய இன்பமிக்க செய்கையல்லாது எனக்கு என்று தனிச்செயல் யாதும் உளதோ என்றார்.

180 வாரமொன்றில் வரவியலா தெனவுரைத்த
தம்மையொரு வாரத் தாங்கு
வாரமொன்றி வரப்புரிந்த மகிமையுடன்
மற்றுமவர் மாண்பும் முன்னி
யீரமொன்று முளத்தினராய்ப் பாபாவை
விட்டகலா திருந்தார் மிக்க
தீரமொன்று செயலினராம் உபாசனிபா
பாவென்னுந் திருப்பே ரோரே.

(போ-ரை) (ஒருவாரம்) எழு நாட்களில் வரமுடியாது என்று கூறிய தம்மை ஒருவாரத்தில் அங்கு அன்பு பொருந்தி வரச்செய்த மகிமையையும் பிற மாட்சியையுஞ் சிந்தித்து அன்புநிறைந்த மனமுடையவராய்ப் பாபாவை விட்டுப் பிரியாதிருந்தார், தைரியமிக்க செயலினராகிய உபாசனிபாபா என்ற திருப்பெயர் வாய்ந்த இவர்.

181 உற்றவர்த் தாங்குஞ் சாயி யுபாசனி யுண்மை ஞானம்
பெற்றினி துய்யு மாறு பெற்றதா யினுமீக் கூர்ந்த
பற்றுடன் மேலும் மேலும் பக்குவ முற்றச் செய்தந்
நற்றவ ரபேத மெய்த நவின்றனர் சிலநன் மார்க்கம்.

(போ-ரை) அடைந்தவர்களை ஆதரிக்கும் சாயி, உபாசனி உண்மைஞானம்பெற்று இனி நற்கதியடையும்வண்ணம் பெற்றதாயினும் மேலான அன்புடன் மேன்மேலும் பக்குவம் முதிரச் செய்து அந்த நற்றவத்தவரின் வேறுபாட்டுணர்ச்சி நீங்கும்படி சிலநன்னெறிகளும் போதித்தனர்.

182 சீரடி யுறைந்த உபாசனி கையாற்
றினந்தோறும் சமைத்துண வுணுமுன்
ஆரஞ ரொழிக்கும் சாயியாங் குருவுக்
கர்ப்பணஞ் செய்தலா லருந்தார்
பேரறி வுடையோர் சமைத்திடு மோர்நாட்
பெருங்கருஞ் சுணங்கனொன் றெய்தி
நேருற வுற்றுப் பார்த்திருந் ததுபின்
னிவேதனங் குருவினுக் குஞற்ற.

(பொ-ரை) சீரடி வந்த உபாசனி, தன் கையினல் நாடோறும் சமைத்துச் சாப்பிடுமுன்பு அரிய துயரம் அகற்றும் சாயியாகிய குருவுக்கு நிவேதனஞ் செய்து தான் சாப்பிடுவார். மிக்க அறிவுடைய இவர் சமைக்கின்ற நாட்களில் ஓர் நாள், பெரிய கரிய நாயொன்று அடைந்து நேராக உற்றுப் பார்த்திருந்தது. பின் குருவினுக்கு நிவேதனஞ் செய்ய.

183 சென்றிடும் போதும் தொடர்ந்தது கண்டத்
தீதறு நாய்க்கவண் சிறிது
நன்றுண வளிக்க நயந்தனர் நயந்தும்
நற்குரு நாதருக் களித்த
பின்றையிஞ் ஞாளிக் களிப்பலென் றெண்ணிப்
பேரருட் பிழம்பெனப் பிறங்கும்
குன்றனுர் தம்முன் குறுகினுர் தொடர்ந்த
குக்கலைக் கண்டிலார் குணத்தோர்.

(பொ-ரை) சென்ற காலத்தும் தொடர்ந்துவந்ததுகண்டு அந்தக் குற்றமற்ற நாய்க்கு அவ்விடம் சிறிது நன்கு உணவுகொடுக்க விரும்பினர். விரும்பியும் நற்குருநாதருக்கு நிவேதித்தபின்னரே நாய்க்கு அளிப்பேன் என்று நினைத்துப் பெரிய அருட்சோதிமலையாக விளங்குபவர் முன்னிலையில் நெருங்கினுர். நெருங்கியபொழுது தம்பின் நாய்தொடர்ந்துவருவதைப் பார்த்தாரில்லை நற்குணத்தவர்.

184 தேசிகர் தம்பா லமுதுகொண் டடைந்த
திருத்தகு செல்வரைச் சினந்து
மாசிலாய் யானீ வசித்திடும் இல்முன்
வந்துகாத் திருந்தபோ தளியா
தாசுற விங்கேன் வந்தனை யென்ருர்
அடிகணீ ராங்குற லறியேன்
பேசுறு கறுப்பு ஞமலியே யன்றிப்
பின்னெரு வருமுறக் காணேன்.

(பொ-ரை) குருவானவர், தம்மிடம் உணவுகொண்டுவந்த செல்வமிக்க அறிஞரைக் கோபித்துக் குற்றமற்றவனே! நீ வாழ்ந்துவரும் வீட்டின்முன் நான் காத்திருந்தபோது கொடாமல் குற்றம் பொருந்த ஈங்கு ஏன் வந்தாய்? என்ருர். அடிகளே! தாங்கள் அங்குவந்ததை யான் அறியேன். சொல்லப்படுங் கறுப்புநாயொன்றையன்றி மற்ெருருவரையும் அங்குக் கண்டிலேன்.

185 என்றபோ ததுதான் யானெனப் புகன்ருர்
இஃதுண ராமலங் கிருந்த
என்றன தறியா மையை யெவர்க்குரைப்பே
னெனநினை ந் தேகின ரிவர்பின்

என்றமங் குணவு சமைத்திடும் போழ்தில்
எங்கெனுங் கறுப்புநா யெதிரில்
நின்றிடு கிறதா வென்றுபார்த் திருப்பர்
நிகழ்த்திய குருமொழி நினைந்தே.

(போ-ரை) என்ற பொழுது அதுதான் நானெனச் சொல்லினர். இதனை உணராமல் அங்கிருந்த என் அறியாமையை எவரிடம் சொல்வேன் என்றெண்ணிச் சென்றனர். இவர் பிற்காலத்தில் என்றாவது எவ்விடமாவது கறுப்புநாய் எதிர்ப்பட்டுநிற்கின்றதா வென்று கவனித்து வந்தார். குரு கூறிய வாசகத்தை எண்ணி,

186 மற்றொரு தினத்திற் சமைத்திடுங் காலை
வந்திடக் காண்கிலர் சுவானம்
உற்றொரு சுவர்மேற் சாய்ந்துகொண் டிழிந்தோ
னொருவனங் கிவர்மடைப் பளியைச்
சற்றுநோக் குற்றான் சாதியா சாரந்
தன்னிலெ ந்நாளினுந் தணவாப்
பற்றுளா ரவனைச் சேய்மையி லேகப்
பணித்தனர் பரபரப் புடனே.

(போ-ரை) மற்றொருநாள் சமையல்பண்ணுகிறபொழுது நாய் வரக்காணாது சுவர் ஒன்றின்மீது சாய்ந்துகொண்டிருந்த தாழ்குலமகனொருவன் இவர் மடைப்பளியைச் சிறிது பார்க்கலானான். சாதியொழுக்கத்தில் எக்காலத்தும் தவறாத பற்றுள்ளவராகிய உபாசனி அவனைத் தூரத்திற் போகும்படி பரபரப்புடன் கட்டளையிட்டார்.

187 தந்தொழில் முடிந்தவுடன் வழக் கம்போற்
சாயிபாங் குருவினுக் குணவு
தந்திட வவர்முன் னடைந்தன ரீங்கேன்
சார்ந்தனை யாங்கொரு சுவர்மேல்
வந்திருந் தேனைத் துரத்தினை யென்றார்
மாதவ வென்கண்முன் வந்தோன்
சந்திக டோறு மையமேற் றுண்ணுந்
தாழ்குலத் தொருவனே யாமால்.

(போ-ரை) தங்காரியம் முடிந்ததும் வழக்கம்போல் சாயிபாகுங் குருவுக்கு உணவுகொடுக்க அவர்முன் போயினர். இங்கு எதற்காக வந்தாய்? அவ்விடம் ஓர் சுவரின்மேல் வந்திருந்த என்னைத் துரத்தினையே என்றார். மாதவ! என் கண்ணில் எதிர்ப்பட்டவன் சந்திகளிலெல்லாம் பிச்சையேற்றுண்ணும் தாழ்குல மகனேயாகும்.

188 நாதநும் வரவு கண்டிலே னென்றார்
நன்றவண் வந்தவன் நானே
பேதமே னுனக்கிங் குயர்வுதாழ் வெண்ணல்
பிரமசை தன்னியம் பெறுதற்
கேதுவாம் நிலையன் றென்றன ரதுகேட்
டெந்தையா ரருளிய விதுவே
போதநன் னெறியென் றகந்தனை யொழித்துப்
பொருந்தினர் சமத்துவ நிலையே.

(போ-ரை) நாதனே! உமதுவரவை நான் காணவில்லை யென்றார். நல்லது அவ்விடம் வந்தவன் நானே! என் பேதபுத்தி பாராட்டுகின்றாய்? இவ்வுலகில் உயர்வு தாழ்வு என்று கருதுவது, பிரம ஐக்கியம் பெறுவதற்குக் காரணமான நிலையல்ல என்றார். அதுகேட்டு, எந்தந்தையாராகிய குரு உபதேசித்த ஞானமார்க்கம் இதுவேயென்று அகங்காரத்தை யொழித்துச் சமத்துவநிலையைப் பொருந்தினர்.

189 எப்பொருள் களினு மெங்கு மிறையுள னென்னு முண்மை
முப்பொருட் டன்மை யின்ன முறைமுறை விளக்கிக் காட்டி
ஒப்பறு பெரும்பே றீந்தா ருபாசனிக் குவர்போல் யாரே
மெய்ப்பொருள் காண்பே ரின்பம் விபுலமீ தடைந்திட் டோரே.

(போ-ரை) எல்லாப்பொருள்களிடத்தும், எவ்விடத்தும் இறைவன் இருக்கின்றான் என்னும் உண்மையையும் பதி, பசு, பாசம் ஆகிய மூன்று பொருள்களின் இயல்பையும் இன்னவென முறைப்படி விளக்கிக் காண்பித்து ஒப்பற்ற பெரிய பேற்றை உபாசனிக்குச் சாயி உதவியருளினர். இவ்வுபாசனிபோல் உண்மைப்பொருளைக் காண்கின்ற பேரின்ப நிலையை விசாலமான பூமியில் அடைந்திட்டவர் யார்?

190 பெருந்தவ ரிவர்மே லுள்ள பேரருள் கண்டு முன்னங்
கிருந்துதொண் டாற்றுஞ் சீட ரேவரு மழுக்கா றெய்தி
வருந்திட விவர்க்குத் துன்ப வகையினைச் செய்தார் நண்பு
பொருந்திடார் செயற்கு முள்ளம் பொறுத்தவ ணுறைந்தா
[ரன்றே.

(போ-ரை) பெருந்தவராகிய சாயி உபாசனியிடத்துப் பேரருள் புரிகின்றதைக் கண்டு, அங்கு முன்னிருந்து தொண்டாற்றுஞ் சீடர்கள் யாவரும் பொறாமையுற்று உபாசனிக்கு வருத்தமுண்டாகும்படியான துன்பங்களைச் செய்தனர். நட்புப்பொருந்தாதவர்கள் செய்த செயலுக்கு மனம்பொறுத்தே அவ்விடம் தங்கிவந்தார்.

191 உலகெலாந் தராசுத் தட்டி னொருபுற மானு லிந்த
நலமுளோன் மறுதட் டின்கண் நன்றுநின் றதற்கீ டாவான்
நிலமிசை யுணர்வீ ரென்று நிகழ்த்தியிங் கிவரைப் பத்தர்க்
கிலகருள் புரியுந் தூய வியற்குரு மூர்த்தி யாக்கி.

(பொ-ரை) இவ்வுலகமெல்லாம் தராசுத்தட்டின் ஒருபக்கமானல், இந்த நன்மை மிகுந்தவன் மறுதட்டில் நன்ருக நின்று அதற்குச் சமமாவன் என்பதை நீங்கள் யாவரும் உணர்வீர்களாக என்று கூறி, உபாசனியைப் பக்தர்களுக்கு விளங்கும் அருளைப்புரியும் தூய இலக்கணம் அமைந்த குருமூர்த்தியாக்கி,

192 வைத்திட நினைந்து தம்பணி புரியு
மகளிரிற் சந்திரா பாயாம்
உத்தமி கரத்தாற் றிருவபி டேக
முனுற்றிடப் புரிந்தன ருறுவர்
பத்தரிற் சிறந்த வுபாசனிக் கருள்செய்
பான்மைபோற் பரிந்து பா பாசெய்
சித்திக ளநேகஞ் செப்பிய கொண்டு
தெரிகவிம் மகானருள் செகமே.

(பொ-ரை) வைக்க எண்ணித் தமக்குத் தொண்டுசெய்கின்ற பெண்களில் சந்திராபாய் என்பவரின் சிறந்த கையால் திருவபிடேகஞ் செய்வித்தனர்; சாயிபக்தரிற் சிறந்த உபாசனிக்கு அருள்செய்ததன்மை போல் பாபா அன்புடன்செய்த சித்திகள் பலவற்றையுஞ் செப்பிய இவற்றைக் கொண்டு இம்மகானின் அருட்டிறத்தை இவ்வுலகம் அறிவதாக.

193 சித்திகள் பலவுஞ் செய்த செகப்பிர சித்தச் சீவன்
முத்தராஞ் சாயி பாபா முமூட்சுவாய் முனிவ ராதி
வித்தக ரிறைஞ்ச விண்ணோர் மிகுமலர் மாரி தூற்ற
நித்திய பரலோ கத்தில் நிலவிவீற் றிருந்தா ரன்றே.

(பொ-ரை) சித்திகள் பலவுஞ் செய்த உலகப்பிரசித்தம் வாய்ந்த ஜீவன்முத்தராகிய சாயி பாபா முமூட்சுவாய் முனிவர் முதலிய பெரியோர்கள் வணங்கத் தேவர்கள் மிகுந்த மலர்மழைசொரிய நித்தியமான பரலோகத்தில் விளங்கி வீற்றிருப்பாரானுர்.

194 ஓரா யிரத்துத் தொளாயிரத்தி
னுடனீ ரொன்பா னெனப்பகரும்
சீரா ருயரங் கிலவருடந்
திகழக் டோப ரெனுந்திங்கள்

ஈரா றெடுமூன் றுந்திகதி
  யிகவாழ் விகந்து சுகவாழ்வு
பேரா நிலையாஞ் சமாதிநிலை
  பெற்றார் வாழி பெரிதூழி.

(போ-ரை) சிறப்பமைந்த ஆங்கிலவருடம் ஆயிரத்துத்தொளா யிரத்துப் பதினெட்டில் அக்டோபர்மாதம் பதினைந்தாம் நாள் இகவாழ்வு நீங்கிச் சுகவாழ்வாம் நீங்காநிலையாகிய சமாதிநிலையையடைந்தனர் பாபா. அடைந்த இப்பெரியார் நீடூழிவாழி.

**பாபா சமாதி யடைந்தபின்னர் நிகழ்ந்த அற்புதங்கள்.**

195 இத்தவப் பெரியர் சமாதியை யடைந்தும்
  இகத்தவர்க் கருளிய செயல்கள்
எத்தனை யோவிங் கவையெலாம் விரிக்க
  வெனிலுரை யளவையா லியலா
அத்தகு செயல்கள் தமிற்சில வற்றை
  யறைகுவன் மருதியி லொருநாள்
சுத்த சைதன்ய நிலையுறு மிவரே
  தோன்றியோர் வடிவெடுத் தனைய.

(போ-ரை) இத்தவப்பெரியார் ஆகிய சாயி சமாதியை அடைந்தும் இப்பூமியி லுள்ளவர்களுக்கு அருளிய செயலகள் எத்தனையோ உள. இவ்விடம் அவற்றையெல்லாம் விரித்துச் சொல்லவென்றால் உரையளவையால் முடியா. அப்படிப்பட்ட செயல்களிற் சிலவற்றைக் கூறுவேன். மருதியில் ஒருநாள் சுத்தசைதந்யநிலையைப்பெற்ற இவரே ஒரு வடிவெடுத்துத் தோன்றினாற்போன்ற.

196 சகம் புகழ்அகில இந்திய சாயி
  சமாஜநற் றலைவராய்த் தழைக்கும்
மகம்புரி மறையோர் மரபின்மா மணியாம்
  மாண்புறு நரசிம்ம அடிகள்
உகந்திவர் சித்து மகிமையைக் கடல்சூ
  ழுலகிடைப் பரப்புவா னெருதம்
அகந்தனில் நினைந்து நீதிமன் றத்தி
  னதிபரோ டமர்ந்துசா வினரே.

(போ-ரை) பூமிபுகழும் அகில இந்திய சாயிசமாஜத்தின் நல்ல தலைவராய்ச் சிறக்கும் மகஞ்செயும் பெரிய மறையவர்குலத்திலுதித்த மாமணியாகிய மாட்சிமிக்க நரசிம்ம அடிகள், பாபாவின் சித்துமகிமைகளைக் கடல்சூழ்ந்த பூமியிடைப் பரப்பவேண்டுமென்ற எண்ணத்தை ஒப்பற்ற தம் மனத்தில் எண்ணி நீதிமன்றத்தின் தலைவருரொருவடன் கலந்து ஆராயலானார்.

197 நற்றவ ரிவர்தம் மகிமையை நாடு
நகர்தொறுஞ் சென்றுசென் றுங்கண்
உற்றவ ரறியும் வணம் பிரசார
முஞற்றுதற் கொண்பொருட் சகாயம்
மற்றிவண் வேண்டும் வையகத் தெவரே
மனமுவந் தளிப்பவ ரென்று
பற்றறு சாயி சமாஜத்தின் றலைவர்
பகர்ந்தினி திருந்திடும் பொழுதில்.

(போரை) நற்றவராகிய நம் பாபாவின் மகிமையை நாடுகளிலும் நகர்களிலும் போய்ப் போய் அங்குள்ளவர்கள் அறியும்வண்ணம் பிரசாரம் செய்வதற்கு மிகுந்த பொருளுதவிவேண்டும். உலகில் அதற்கான பொருளை மனமகிழ்ந்து கொடுக்கக்கூடியவர் யாவர் என்று பற்றற்ற சாயி சமாஜத்தின் தலைவர் சொல்லிக்கொண்டிருக்கும்வேளையில்.

198 நலந்திகழும் பதினோரா யிரத்தி னோடு
நானூற்றைம் பத்தைந்தா நவிலெண் ணுள்ள
பொலந்திகழுங் கரன்சிநோட் டுகளுட் கொண்ட
புகலரிய கவரொன்றைப் புனிதம் வாய்ந்த
குலந்திகழுஞ் செல்வர்போ லொருவர் வந்து
கொடுத்திவற்றாற் குறித்திடும்நும் பிரசா ரத்தைப்
பலந்திகழும் படிபுரிக வென்றன் பின்சொல்
பகர்ந்துமறைந் தாரிதனைப் பார்த்த அன்னார்.

(போ-ரை) நன்மை விளங்கும் பதினோராயிரத்து நானூற்றைம்பத்தைந்து ரூபாய்களாக எண்ணப்படும் அழகிய கரன்சிநோட்டடங்கிய கவர் (பை) ஒன்றைத் தூய்மைபொருந்திய குலத்திலுதித்த செல்வரொருவர் வந்து கொடுத்து இவற்றால் தாங்கள் கருதும் பிரசாரத்தைப் பலம்பெறும்படி செய்க என்று அன்புமொழிகூறி மறைந்தனர். இதனைக் கண்ட அவர், (சமாஜத் தலைவர்.)

199 ஊர்பெயர்நா னறியாத வொருவர் வந்திங்
குதவிமறைந்த னரிவரை யொருநா ளேனும்
நேர்வரக்கண் டறிந்திலே னின்று வந்து
நேயமுடன் பெரும்பொருளொன் னீறிற் றந்து
யாரெனயான் வினவுமுனங் கரந்தா ரீதோ
ரதிசயமே பாபாவி னருளா மென்று
சார்வுறுமன் னதைச்சாயி சமாஜ மூல
தனமாக வைத்தனரித் தகைசான் றோரே.

(போ-ரை) ஊர் பேர் தெரியாத ஒருவர் வந்து இங்குக் கொடுத்து மறைந்தனர். ஒருநாளேனும் இவரை நேரில் வரக் கண்டு அறிந்த

தில்லை. இன்று வந்து அன்புடன் மிகுதியான பொருளை நேரில் என் கையில் தந்தார். தாங்கள் யாரென்று கேட்பதற்குமுன்னம் மறைந்து விட்டார். இது ஓர் அற்புதமே! பாபாவின் அருளாம் என்று கிட்டிய பொருளை, சாயி சமாஜ மூலதனமாக அப்பெரியார்வைத்தனர்.

வாழ்த்து

200 இந்நூ லினுக்கு முதனூலீந்
தென்னையு மொருவ னெனப்பொருள்செய்
முந்நூ லணியு மணிமார்பன்
முதுநீ ருலகிற் பாபாவின்
பொன்னேர் புகழெங் கணும்விளங்கப்
புரியும் பிரசா ரகப்புனிதன்
றொன்னூ லுணர்ந்தோன் நரசிம்ம
சுவாமி வாழி துதியார்ந்தே.

(பொ-ரை) இந்த நூலுக்கு முதனூல் அருளி, என்னையும் ஒரு பொருளாகக் கருதிய முந்நூல் அணிந்துள்ள அழகிய மார்பையுடைய வரும், கடலாற் சூழப்பட்ட உலகத்தில், பாபாவின் பொன்னையொத்த புகழ் எவ்விடத்தும் விளங்கும்படிசெய்யும் பிரசாரக சீலரும், பழமை யான நூல்களை உணர்ந்தவருமாகிய நரசிம்மசுவாமிகள் புகழ் தழைத்து நீடூழி வாழி.

201 சகம்பரவும் அகிலஇந் தியசாயி சமாஜத்
தலைவரெனும் நரசிம்ம சாமி தம்பால்
உகந்துறைந்து சமாஜத்தின் பணிகள் யாவும்
உடனுற்றும் புகழமைந்த வுசித முள்ளோன்
பகர்ந்திடுநற் சாயிபா பாபுராணம்
பாரில்வெளி வரமுயன்ற பரம சீலன்
மகஞ்செயுமந் தணர்மரபோன் இராதாகிருஷ்ண
வண்பெயரோன் நீடூழ் வாழி வாழி.

202 சாயி பாபா பக்தசபை
தழைக்கத் தக்க பணிபலவும்
நேய முடன்செய் செயலாளன்
நிதிக்கோ னிகரும் பொருளாளன்
ஆயுஞ் சாயி புராணமதை
அச்சி லிடற்கா வனபுரிந்த
தூயன் மதுரை இராஜமன்னார்த்
தோன்றல் வாழி சுபமார்ந்தே.

203 வாழி சீரடி மாநகர் வாழ்பவர்
வாழி சாயி வரோதய மாதவர்
வாழி சாயி புராணமிவ் வையகம்
வாழி சாயி சமாஜமும் வாழியே.

சுபம் !

சாயிபாபாபுராணம் மூலமும் பொழிப்புரையும் இரண்டாம் பாகம் முற்றிற்று.

9. எவனொருவன் தன் மனதில் என்னையே எண்ணி, எனக்கு அளிக்காத அன்னத்தைத் தொடானோ, அவனுக்கு நான் அடிமை. அவ்விதமே என்னைப் பசியும் தாகமுமாகக் கொள்வானோ, அவனுக்கு நான் அடிமை. அவ்விதமே என்னைப் பசியும் தாகமுமாகக் கொண்டு, என்னைத்தவிர இதர வஸ்துவை முக்யமானதாகக் கொள்ளானோ, அவனுக்கு நான் அடிமை.

10. நான் பக்த பராதீனன் நான்; பக்தர்களின் அடிமை; நான் விரும்புவது பக்தியே.

11. ஒருவரிடமும் நான் கோபம் கொள்வதில்லை. தன் குழந்தைகள் மேல் பெற்றதாய் கோபம் கொள்வாளா? சமுத்திரம் (தன்னைச் சேரும்) பல ஆறுகளுக்கு நீரைத் திருப்பி அனுப்புமா? நான் பக்தியை விரும்புகிறேன். நான் என் பக்தன் அடிமை. பக்த பராதீனன்.

12. என் நாமத்தை ஜபி. என்னிடம் சரணமடை. ஆனால் நான் யார் என்று மாத்திரம் அறிய விரும்பினால், ச்ரவணமும் மனனமும் வேண்டும்.

13. என் மஹா சமாதிக்குப் பின்னும், நீ என்னை நினைத்த இடத்தில் க்ஷணத்திலேயே நான் இருப்பேன்.

14. உள்ளன்போடு ஒரு பக்தன் என்னைக் கூப்பிட்டவுடன் நான் பிரத்தியக்ஷமாகிறேன். பிரயாணம் செய்ய எவ்வித வண்டியும் எனக்குத் தேவையில்லை.

15. என் அடியார்களைத் தீங்கிற்கு ஆளாக்கமாட்டேன். எப்போதும் என் அடியார்களில் எவனாவது விழ நேர்ந்தால், என் கரங்களை நீட்டி, இவ்விதமாக நான்கு—(எண்ணிறந்த)—கரங்களால், அவனைத் தாங்குகிறேன், அவனைக் கீழே விழவிடமாட்டேன்.

16. உன் கோரிக்கையின் லக்ஷ்யமாகவும், எண்ணங்களின் லக்ஷ்யமாகவும், என்னையே கொண்டாயானால், நீ பரமார்த்தமடைவாய். என்னைவிரும்பி நோக்கினால் நான் கடாக்ஷித்தருளுகின்றேன். குருவினிடம் பூரண விசுவாசம் வை. அதுதான் சாதனம். குருவே தெய்வம்.

ஓம் சாந்தி.

———

# BOOKS ON SRI SAI BABA

| | ENGLISH | Rs. | A. | P. |
|---|---|---|---|---|
| 1. | Baba's Charters 1-57 ... | 0 | 1 | 0 |
| 2. | Who is Sai ... | 0 | 2 | 0 |
| 3. | Sagunopasana ... | 0 | 3 | 0 |
| 4. | Baba's Charters and Sayings Cloth Bound ... | 2 | 8 | 0 |
| | Wrapper Bound ... | 2 | 0 | 0 |
| 5. | Introduction to Sai Baba ... | 0 | 4 | 0 |
| 6. | Devotees' Experience Parts I & II (combined, New Edition)... | 1 | 0 | 0 |
| 7. | Do. Part III ... | 0 | 10 | 0 |
| 8. | Wondrous Saint ... | 0 | 8 | 0 |
| 9 | Glimpses of Sri Sai Baba ... | 1 | 8 | 0 |
| 10. | Translation of Sainatha Manana ... | 0 | 6 | 0 |
| 11. | Guide to Shiridi (with illustration) ... | 0 | 12 | 0 |
| 12. | Dasaganu Sri Harikathas Marathi Text with Eng. Tr. ... | 1 | 0 | 0 |
| 13. | Sri Katha H.B.P. Dasaganu Maharaj and Series ... | 0 | 6 | 0 |
| 14. | Sai Nath Mananam Sanskrit Text & Eng. Tr. Revised ... | 0 | 8 | 0 |
| 15. | Souvenir (Convention) 1946 ... | 0 | 8 | 0 |
| | **TAMIL** | | | |
| 1. | Baba's Charters 1-57 ... | 0 | 1 | 6 |
| 2. | Who is Baba ... | 0 | 2 | 0 |
| 3. | Introduction ... | 0 | 4 | 0 |
| 4. | Sai Baba Sasanamrita Tirumoli Part II ... | 0 | 12 | 0 |
| 5. | Do (combined) ... | 1 | 4 | 0 |
| 6. | Sai Natha Pooja Vidhi ... | 0 | 4 | 0 |
| 7. | 108 Namavali with meanings ... | 0 | 1 | 0 |
| 8. | Devotees' Experiences, Part I ... | 0 | 8 | 0 |
| 9. | Do Part II ... | 0 | 12 | 0 |
| 10. | Sai Baba Sangeetha Keerthanams by Sow. Amirtham ... | 0 | 3 | 0 |
| 11. | Sai Sangeetamalai by Sow. Rajam ... | 0 | 3 | 0 |
| 12. | Sai Jeevya Charita History ... | 0 | 8 | 0 |
| 13. | Sai Bajana Pathathi ... | 0 | 7 | 0 |
| 14. | Sai Leela ... | 1 | 0 | 0 |
| 15. | Sri Sainatha Mananam ... | 0 | 4 | 0 |
| 16. | Sri Sathguru Sainatha Sagunopasana ... | 0 | 4 | 0 |
| 17. | Bajanavali (10, 11, 13 combined) ... | 0 | 12 | 0 |
| 18. | Kummi, Kolattam, Dance and Abhinayam etc. Songs on Sai by Yethirajammal ... | 0 | 4 | 0 |
| 19. | Naga Sai Songs by Yethirajammal ... | 0 | 2 | 0 |
| 20. | Sri Sahasranama ... | 0 | 4 | 0 |
| 21. | ,, with verse form ... | 0 | 6 | 0 |
| 22. | Sai Katha Marathi Text Tamil Translation ... | 0 | 8 | 0 |
| 23. | Sai Katha Part II ... | 0 | 8 | 0 |
| 24. | Tamil Souvenir (Convention) ... | 0 | 8 | 0 |
| 25. | Tamil Guide to Shiridi with Illustration ... | 0 | 12 | 0 |
| 26. | Tamil Bhajanavali with Swaram ... | 0 | 8 | 0 |
| 27. | Tamil Puranam Parts I & II ... | 1 | 0 | 0 |
| | (By Vidwan Nallasivan Pillai) | | | |